

பற்களை சுத்தம்
செய்வது
**பாதி** வேலை
தான் . . .



தினமும்
ஈறுகளைப்
பாதுகாப்பது
அந்த வேலையை
**பூர்த்திசெய்
கிறது!**




உங்கள் பற்கள் எவ்வளவு ஒழுங்கானவையாக இருந்தாலும் அவைகளை வகிக்கும் ஈறுகள் பலமிழந்தோ அல்லது நோயுற்றோ போனால் அவை உபயோகமற்றதாகி விடுகின்றன. அதனால் இந்த ஆபத்துக்குள்ளாகாதீர்கள்! தினமும் இருமுறை கிப்ஸ் எஸ். ஆர். டூத்பேஸ்ட் உபயோகியுங்கள். பல் வைத்தியர்கள் ஈறுகளை உறுதியாகவும், ஆரோக்கியமாகவும் வைத்திருக்க உபயோகிக்கும் ஸோடியம் ரிஸினோலியேட் இதில் அடங்கியுள்ளது. மேலும் எஸ். ஆர். டூத்பேஸ்ட் பற்களை பளிச்சென்று வெண்மையாக சுத்தம் செய்கிறது.

கிப்ஸ்
ரிஜிஸ்டேர்ட்
# எஸ்.ஆர். டூத்பேஸ்ட்

பற்களை பளிச்சென்று வெண்மையாகவும் ஈறுகளை ஆரோக்கியமாகவும் வைத்திருப்பதற்கென்றே பிரத்தியேகமாக தயாரிக்கப்பட்டுள்ளது

GSR. 78-50-55 TM

# ஜூபிடர்

தயாரிப்பு

உணர்ச்சிகளின் உறைவிடம்!
உள்ளமோ கனிவிடம்!!
உலகெலாம் மயங்கும்
இவளிடம்!!!

# ராணி

சென்னை

**பாரகன் . ஸ்ரீ கிருஷ்ணா . ட சயானி**

மற்றும் தென்னாடெங்கும் நடைபெறுகிறது



டைரக்ஷன்: **பிரசாத்**... ஸ்டுடியோ: சென்ட்ரல் நெப்ட்யூன்

பக்ஷிராஜாவின்

# காஞ்சனா




திரள் திரளாகக் கண்டு களிக்கின்றனர்

# கல்கி பொருளடக்கம்

மலர் 11
இதழ் 42

1952 மே 18

நந்தன ௵
வைகாசி 5











# விமான விபத்து!










பல கட்சிகளை ஒட்டுப் போட்டு அமைந்த ஐக்கிய ஜனநாயக முன்னணிக் கட்சி விரைவில் சிதறிப் போகலாம் என்று எதிர்பார்க்கப்படுகிறது.



கல்கி

மலர் 11

தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார்

இதழ் 42

# காங்கிரஸ் எதிரிகளுக்கு நமது வந்தனம்

சென்ற ஐந்து வருஷ காலமாகச் சென்னைச் சட்ட சபை நடவடிக்கைகள் ரஸமில்லாமல் சப்புச் சவுக்கென்று இருந்தன. சட்டசபை உயிரற்றிருந்தது என்று சொல்வதும் தவறாகாது. பொது மக்களின் கவனத்தைச் சட்ட சபை கவர்ந்திருக்கவில்லை. சட்டசபைக்குச் சென்று நடவடிக்கைகளைக் கவனிக்கும் ஆர்வம் யாருக்கும் உண்டாகவில்லை. தப்பித் தவறி யாராவது போய்ப் பார்த்தால் பெரிதும் மனச் சோர்வு கொள்ளக் காரணமாயிருந்தது. பெரும்பாலான ஆசனங்கள் காலியாகக் கிடக்கும். மண்டபத்தில் முப்பது நாற்பது அங்கத்தினர் இருந்தால் பெரிய காரியம். அவர்களும் காலை நீட்டிப் போட்டுக் கொண்டு தூங்குவார்கள்; அல்லது தூங்கி வழிவார்கள். மந்திரிகளே பெரும்பாலும் சட்டசபைக்கு வருவதில்லை.

தினப் பத்திரிகைகளிலும் சட்ட சபை நடவடிக்கைகளை அதிகமாக யாரும் படிப்பதில்லை. ஏதாவது புதிய வரி போடப்படும்போது படிப்போம். சில நாள் அதைப் பற்றிக் காரசாரமாகப் பேச்சுக்கள் நடக்கும்; பிறகு அதுவும் மறந்து விடப்படும்.

பழைய சட்டசபைக்கும் புதிய சட்டசபைக்கும் எவ்வளவு வித்தியாசம்? சட்ட சபை நடவடிக்கைகளை இப்போதெல்லாம் எவ்வளவு ஆர்வத்துடன் கவனிக்கிறோம்? தினப் பத்திரிகைகளில் அந் நடவடிக்கைகளை எவ்வளவு ஆவலுடன் படிக்கிறோம்? தினப் பத்திரிகைகளைப் பார்த்து விட்டு உடனே மூலையில் போட்டு விடாமல், எடுத்துப் பத்திரப்படுத்தி வைக்கவும் ஜனங்கள் தொடங்கி விட்டார்கள்!

இவ்வளவு பெரிய பொதுத் தேர்தல் நடந்ததற்கும், இவ்வளவு பணச் செலவில் புதிய சட்டசபை மண்டபம் கட்டியதற்கும் பலன் கிட்டி விட்டதென்றே சொல்லலாம். ராஜாஜி சட்டசபையில் நிகழ்த்திய பிரசங்கம் ஒன்றே போதும்! அதைப் படித்தபோது பொது மக்கள் அடைந்த குதூகலம் அடுத்த சட்டசபைக் கூட்டம் ஆரம்பமாகும் வரையில் நீடித்து நிற்கும் அல்லவா?

இவ்வளவுக்கும் மூலகாரணமாயிருந்த காங்கிரஸ் எதிரிகளுக்கு நம் வந்தனத்தைச் செலுத்தாமல் வேறு என்ன செய்வது? "இந்தாருங்கள், பிடித்துக் கொள்ளுங்கள்" என்று ஒரு தடவைக்கு மூன்று தடவையாக நம்முடைய வந்தனத்தை அவர்களுக்கு அளிக்கத்தான் வேண்டும்.

* * * *

ராஜாஜி தலைவராகவும் முதன் மந்திரியாகவும் வருவதற்குக் காரணமாயிருந்ததோடு கூட, சட்டசபை நடவடிக்கைகளை மேலும் ரஸமாகச் செய்வதற்குக் காங்கிரஸ் எதிர்க் கட்சிக்காரர்கள் முயற்சி எடுத்து வருகிறார்கள்.

இந்த எதிர்க்கட்சியின் அமைப்பு எத்தகையதென்பது நேயர்களுக்குத் தெரிந்த விஷயந்தான். தேர்தலுக்கு முன்னால் இவர்களுக்குள் ஒற்றுமையோ, ஒரே வேலைத் திட்டமோ கிடையாது. ஒருவரை யொருவர் எதிர்த்துப் போட்டியிட்டவர்கள். தேர்தலுக்குப் பிறகு மந்திரி பதவிகளைக் கைப்பற்ற வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன் ஒன்று சேர்ந்த பலபட்டரைக்காரர்கள். "ஐக்கிய ஜனநாயக முன்னணி" என்று பெயர் சூட்டிக் கொண்டார்கள். நம் புதிய நிதி மந்திரி கனம் சி. சுப்பிரமணியம் கடற்கரைக் கூட்டத்தில் கூறியது போல், 'இவர்களுக்குள் உண்மையான ஐக்கியமும் இல்லை; ஜனநாயகமும் இல்லை; இவர்கள் முன்னணியில் இருக்கப் போவதுமில்லை!' மந்திரி பதவியைக் கைப்பற்றும் ஒரே நோக்கத்துடன் ஒன்று சேர்ந்து கொண்டு, "நாங்கள் 166 பேர்கள்; எங்களிடம் இராஜ்யத்தை ஒப்புவிக்கவும்" என்றார்கள்.

காங்கிரஸ் கட்சியில் வந்தவர்கள் 152 பேர்கள்தான். ஆனால் சட்டசபையில் இவர்களே தனிப்பெரும் கட்சியினர். அதோடு இன்னொரு ஐம்பது அங்கத்தினரின்

ஆதரவு தங்களுக்குக் கிடைக்கும் என்று காங்கிரஸ் கட்சியார் எதிர்பார்த்தார்கள்.

இந்நிலைமையில் கவர்னர் ஸ்ரீ பிரகாசா என்ன செய்தார்! நேர்மையுள்ள, அரசியல் ஞானமுள்ள, புள்ளிக் கணக்கு தெரிந்த எவரும் செய்யக் கூடியதைத் தான் செய்தார். காங்கிரஸ் கட்சியினால் ஏகமனதாகத் தேர்தெடுக்கப் பட்ட தலைவரை மந்திரிசபை அமைக்கும்படி கேட்டுக் கொண்டார்.

காங்கிரஸ் எதிரிகளுக்கு வயிற்றெரிச்சல் கிளம்பி விட்டது. வயிற்றிலிருந்தும் வாயிலிருந்தும் புகையைக் கக்கத் தொடங்கினார்கள். ''கெட்டிக்காரன் புளுகு எட்டு நாளில் வெளியாகும்; நம்முடைய புளுகு எட்டு மணி நேரத்துக்குள் வெளி வந்து விடுமே!'' என்ற ஆத்திரந்தான் காரணம்.

இதற்காக முதல் நாளே ஒரு நாடகத்தை நடத்தத் தீர்மானித்தார்கள். சட்டசபை மண்டபத்தைச் சுற்றித் தங்கள் கட்சிக்காரர்களைக் கொண்டுவந்து சேர்த்து ஆர்ப்பாட்டம் நடத்தத் தீர்மானித்திருந்தார்கள். காங்கிரஸ் சார்புள்ளவர்களைப் பயமுறுத்திச் சட்டசபைக்குள் புகமுடியாமல் தடுத்து விடுவது என்றெல்லாம் திட்டம் போட்டார்கள். அவர்களுடைய பத்திரிகைகளில் அத்தகைய தூண்டுதல்கள் கொட்டை எழுத்துக்களில் வெளியாயின.

பொதுத் தேர்தல் நடந்தபோது, தேர்தல் தினத்தன்று எவ்வித ஆர்ப்பாட்டமும் கூடாது என்று தடை விதிக்கப்பட்டிருந்தது நேயர்களுக்கு நினைவிருக்கலாம். வோட்டுச் சாவடிக்குப் பக்கத்தில் 'இன்னாருக்கு வோட்டுப் போடு' என்று சொல்லவும் கூடாது என்று விதிக்கப்பட்டிருந்தது.

பொதுத் தேர்தலில் ஜனப் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய சமயத்திலேயே, இத்தகைய கட்டுப்பாடு அவசியமென்று கருதப்பட்டது. அப்படி இருக்கும்போது ஜனப்பிரதிநிதிகள் சட்டசபையின் சபாநாயகரைத் தேர்ந்தெடுக்க வேண்டிய தினத்தில் சபா மண்டபத்தைச் சுற்றி ஆர்ப்பாட்டம் நடத்த யத்தனித்தவர்களைப் பற்றி என்னவென்று சொல்வது! அத்தகைய ஆர்ப்பாட்டத்துக்கு அவசியம் என்ன! சபாநாயகரைத் தேர்ந்தெடுக்க வேண்டிய முறை பற்றி ஜனப் பிரதிநிதிகளுக்கு மற்றவர்கள் ஆர்ப்பாட்டத்தின் மூலம் என்னத்தை உணர்த்த வேண்டும்! அத்தகைய ஆர்ப்பாட்டம் நடத்த யத்தனித்தவர்கள் ஜனநாயகத்தில் நம்பிக்கை கொண்டவர்களாவார்களா! அத்தகைய பிரயத்தனங்களை ஜனநாயகம் என்றுதான் சொல்ல முடியுமா! 'ஹிட்லர் நாயகம்', 'ஸ்டாலின் நாயகம்' 'போக்கிரி நாயகம்' 'கலாட்டா நாயகம்' என்ற பெயர்களில் ஒன்றைத்தான் அவர்கள் கைக் கொள்ள எண்ணிய முறைக்குச் சூட்ட வேண்டும்.

* * *

சபாநாயகர் தேர்ந்தெடுக்கப்பட்ட பிறகு சட்ட சபையின் கௌரவத்தைக் காப்பாற்றும் பொறுப்பு அவருடையது. சபாநாயகர் தேர்ந்தெடுக்கப்படும் வரையில் சட்ட சபையின் கௌரவத்தையும் ஜனநாயகத் தன்மையையும் காப்பாற்றும் பொறுப்பு அரசாங்கத்தினுடையது. ஆகையால் சட்டசபை மண்டபத்துக்கு அருகில் ஆர்ப்பாட்டம் எதுவும் நடத்தக் கூடாது என்று நிர்வாக உத்தரவு பிறந்தது. ஏற்கெனவே எதிர்க் கட்சியினர் கொண்டிருந்த வயிற்றெரிச்சல் இதனால் கொழுந்து விட்டு எரியத் தொடங்கியது.

மேற்படி தடை உத்தரவினால் சட்டசபை அங்கத்தினர் யாருக்கும் எவ்வித இடையூறும் நேரவில்லை. எல்லா அங்கத்தினரும் சட்டசபை மண்டபத்துக்குள் வந்தார்கள். சபா நாயகர் தேர்தலில் வோட்டுப் போட்டார்கள். அதன் முடிவு எதிர்க்கட்சியின் ஆசையில் இடி போல் விழுந்தது. காங்கிரஸ் கட்சியால் ஆதரிக்கப்பட்ட அபேட்சகருக்கு 206 வோட்டுக்கள் கிடைத்தன. பலபட்டரை எதிர்க்கட்சியின் அபேட்சகருக்கு 162 வோட்டுக்கள்தான் கிடைத்தன. ''நாங்கள்தான் மெஜாரிட்டிக் கட்சி. எங்களைத் தான் மந்திரி சபை அமைக்க அழைத்திருக்க வேண்டும்!'' என்ற புளுகை இனி மேல் புளுக முடியாதல்லவா!

அந்த ஆத்திரத்தைத் தீர்த்துக் கொள்ள ஆந்திர கேசரியார் கால்நடை வீரராகத் தீர்மானித்தார்.

அரசியல் திட்டத்தின்படி சட்டசபையை ஆரம்பித்து வைப்பதற்காகக் கவர்னர் ஸ்ரீ பிரகாசா பிரசங்கம் செய்ய எழுந்து பேச ஆரம்பித்ததும், ஆந்திரகேசரி தம் அழகை கர்ஜனையைத் தொடங்கினார். மரியாதைக் காரரான கவர்னர் ''கிழச் சிங்கம் அழுதுவிட்டுப் போகட்டும்'' என்று ஆசனத்தில் அமர்ந்தார். சாதாரண பொதுக் கூட்டங்களைக் கலைக்க விரும்பும் மட்டரகமான மனிதர்களைப் போல் ஆந்திர கேசரி ஏதேதோ அபத்தமாகப் பேசி விட்டுக் கால் நடைத் திட்டத்தைக் கைப்பற்றினார். அவருடைய சீடர்களில் சிலரும் அவரைப் பின்பற்றினார்கள்: அரசியல் திட்டத்துக்கே புறம்பான இந்தக் கேவலமான காரியத்தைக் கவர்னர் சகித்துக் கொண்டிருந்தது அவருடைய பெருந்தன்மைக்கு நிதரிசனமாக இருந்தது.

* * *

போனவர்கள் சீக்கிரத்திலேயே திரும்பி வந்தார்கள். திரும்பி வந்து இன்னொரு முறையும் தங்கள் பலத்தைப் பரீட்சை செய்துபார்த்தார்கள். ''சட்ட சபை மண்டபத்துக்கு வெளியே ஆர்ப்பாட்டம் செய்யக்கூடாது என்று தடுத்தது சட்ட சபை அங்கத்தினரின் உரிமையைப் பறிப்பதாகும்'' என்று சொல்லிக் கண்டனத் தீர்மானம் கொண்டு வந்து, தோல்வி அடைந்தார்கள்.

கவர்னரின் பிரசங்கத்தைத்தான் காதினால் கேட்க மாட்டோம் என்று போனார்களே! அதைக் கவனியாமலே இருந்து விட்டார்களா! இல்லை. ''கவர்னர் பிரசங்கம் திருப்திகரமாக இல்லை; அதில் கொள்கை இல்லை, திட்டம் இல்லை'' என்று திருத்தப் பிரேரணை கொண்டு வந்தார்கள். ''மந்திரி சபையின் பேரில் நம்பிக்கை இல்லை'' என்ற பிரேரணையையும் அத்துடன் பிணைக்கப் பார்த்தார்கள்.

கவர்னர் பிரசங்கம் முடிந்த பிறகு, அந்தப் பிரசங்கத்துக்காகக் கவர்னருக்கு வந்தனம் செலுத்தும் பிரேரணை கொண்டு வந்து நிறைவேற்றுவது சம்பிரதாயம். இந்தச் சம்பிரதாயப் பிரேரணையின் பேரிலேதான் மேற்படி திருத்தங்களைக் கொண்டு வந்தார்கள்.

இதற்காகக் காங்கிரஸ் எதிரிகளுக்கு நம் மூதன்மையான வந்தனம் உரியது. ஏனெனில் ராஜாஜியின் அற்புதமான பிரசங்கத்தை அதனாலேதான் கேட்க முடிந்தது; கேளாதவர்கள் பத்திரிகைகளில் படிக்க முடிந்தது.

அப்பிரசங்கத்தில் ராஜாஜி ''இந்த மாகாணத்தை அரசியல் குழப்பத்திலிருந்து காப்பதற்காகவே நான் முதன்மந்திரி வேலை ஒப்புக் கொண்டேன்; காப்பாற்றியே தீருவேன்'' என்று திட்டமாகச் சொல்லியிருக்கிறார். இந்த வாக்குறுதி இம்மாகாண வாசிகளுக்கு ஒப்பற்ற குதூகலத்தை அளித்திருப்பதில் வியப்பில்லை அல்லவா!

ராஜாஜியின் பேச்சுக்குப் பிறகு எதிர்க் கட்சியினர் மறுபடியும் தங்கள் பலத்தைப் பரீட்சை செய்ய விரும்பவில்லை. வோட்டு எண்ணும்படியும் அவர்கள் கேட்கவில்லை. திருத்தங்கள் எல்லாம் விழுந்து பட்டன.

கவர்னருக்கு வந்தனம் அளிக்கும் பிரேரணை உற்சாகமாக நிறைவேறியது.

இவ்வாறு புதிய சட்ட சபையின் நடவடிக்கைகள் அமோக குதூகலத்துடன் ஆரம்பமாகியிருக்கின்றன. இந்த மாகாண மக்களுக்கு சென்ற பத்து வருஷங்களில் கண்டிராத மகத்தான உற்சாகத்தை ஊட்டியிருக்கின்றன.

இதற்காகக் காங்கிரஸ் எதிரிகளுக்கு நாம் வந்தனம் செலுத்த வேண்டியது அவசியமே அல்லவா!

# நமது ஜனாதிபதி

சென்ற செவ்வாய்க்கிழமை யன்று டில்லிமாநகரெங்கும் ஒரே குதூகலமாக இருந்தது. மங்கல வாத்தியங்களின் முழக்கமும் ஜனங்களின் சந்தோஷ ஆரவாரமும் வானளாவின.

அன்று புதுடில்லியில் நடந்த வைபவத்தை யாரும் மறக்க முடியாது. அன்றுதான் குடியரசு இந்தியாவின் முதலாவது ஜனாதிபதி பாபு ராஜேந்திரப் பிரசாத் விசுவாசப் பிரமாணம் செய்து மேற்படி மகத்தான பதவியை ஏற்றுக் கொண்டார்.

பாபு ராஜேந்திரர் ஜனாதிபதி பீடத்தில் அமர்ந்த போது தேவர்களின் ஜெயபேரிகைகளுக்கு ஒப்ப குண்டுகள் முழங்கின. மந்திரிகள் மரியாதை செய்தனர். இந்தியத் துருப்புகள் அணிவகுத்து நின்றன. அப்போது எழுந்த தேசிய கீதத்தின் நாதம் காற்றில் மிதந்து பாரத நாடெங்கும் பரவிக் கோடானு கோடி மக்களின் ஹிருதயத்தில் எதிரொலி செய்தது.

“பாபு ராஜேந்திரப் பிரசாதின் வாழ்க்கை வரலாறு ஓர் இதிகாசம் போன்றது. அந்த இதிகாசத்தைத் தங்கப் பேனாவினால் எழுத வேண்டும்.”

சில வருஷங்களுக்கு முன், இந்திய தேசிய மகா சபையின் அக்ராசனராக இருந்த பாபு ராஜேந்திரரைப் பற்றி ஸ்ரீமதி சரோஜினி தேவி மேற்கூறிய விதம் பாராட்டிப் பேசினார்.

பாபு ராஜேந்திரப் பிரசாத் ஓர் இலக்கிய மேதாவி, அரசியல் தியாகி, உயர்ந்த கொள்கைகளில் ஊறித் திளைத்தவர். பாரத நாட்டின் பண்பாட்டுக்கு உகந்த எளிய வாழ்க்கைக்கும் உயர்ந்த சிந்தனைக்கும் உதாரண புருஷர். எல்லாவற்றிற்கும் மேலாக அவர் காந்தி மகானின் அடிச்சுவடுகளை வழுவாமல் பின்பற்றும் பரம பக்தர்.

அப்பேர்ப்பட்ட ஒரு தலைவர் குடியரசு இந்தியாவின் முதலாவது ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது பாரத நாட்டின் பாக்கியம் அல்லவா!

# “தஞ்சை மிராசுதாரைத் தாக்கு!”

தமிழ் நாட்டில் “ஊருக்கு இளைத்தவன் பிள்ளையார் கோவில் ஆண்டி” என்பதாக ஒரு பழமொழி உண்டு. அந்தப் பிள்ளையார் கோவில் ஆண்டியின் ஸ்தானத்தை அரசியல் உலகத்தில் இன்று தஞ்சாவூர் மிராசுதார் வகிக்கிறார். “யாரையும் தாக்குவதற்கில்லாவிட்டால் தஞ்சாவூர் மிராசுதாரைத் தாக்கு!” “யார் தலையிலும் கல்லைத் தூக்கிப் போட முடியாவிட்டால் தஞ்சை மிராசுதார் தலையிலே போடு!” என்ற கொள்கையைச் சில அரசியல் வாதிகள் சிறிது காலமாகக் கடைப் பிடித்து வருகிறார்கள்.

சென்ற பொதுத் தேர்தல் வரையில் பூண்டி வாண்டையார், குன்னியூர் ஐயர் முதலியவர்களின் உற்ற தோழராயிருந்த தமிழ்நாடு காங்கிரஸின் மாஜி தலைவர் ஸ்ரீ காமராஜ நாடார் இம்மாத ஆரம்பத்தில் செங்கற்பட்டு ஜில்லா பொன்னேரியில் ஒரு பிரசங்கம் செய்தார். அதில் தஞ்சாவூர் மிராசுதார்களைப் பிடித்து வெளுத்து வாங்கினார். அவருடைய பிரசங்க விவரம்: “தஞ்சை மிராசுதார்கள் அட்டூழியம்; காமராஜ் எச்சரிக்கை” என்ற கொட்டை எழுத்துத் தலைப்புடன் தினப் பத்திரிகையில் வெளியாகியிருக்கிறது.

‘தஞ்சாவூர் மிராசுதார்’ என்னும் அந்தப் பயங்கரப் பிராணியைப் பற்றி மற்ற ஜில்லாக்காரர்களுக்குச் சில விவரங்கள் தெரிந்திருப்பது நலம்.

ஒரு காணி, அரைக்காணி, அல்லது ஐம்பது குழி நிலம் உடையவர்களைக் கூடத் தஞ்சாவூர் ஜில்லாவில் மிராசுதார் என்று சொல்லுவது வழக்கம். பத்திரங்கள் எழுதும் போது “பொன்னுசாமிப்பிள்ளை குமாரர் கண்ணுசாமிப் பிள்ளை, மிராசு, சைவ மதம்......” என்று தொடங்குவது வழக்கம். இப்படி ஒரு குடும்பத்தின் ஜீவனத்துக்குக்கூடப் போதாத சொற்ப நிலம் உடைய ஏழை மிராசுதார்கள் தஞ்சாவூர் ஜில்லாவில் லட்சக் கணக்கானவர்கள்.

இருபத்தைந்து ஏக்கரா நிலத்துக்கு மேல் பெற்றுள்ள நடுத்தர மிராசுதார்கள் சில ஆயிரம் பேர் இருப்பார்கள்.

இருநூறு முந்நூறு ஏக்கராவுக்கு மேல் நிலம் படைத்த பெரிய மிராசுதார்கள் சில நூறு பேருக்கு மேல் இருக்க மாட்டார்கள்.

இவர்களும் அப்படி ஒன்றும் கோர ராட்சதர்கள் அல்ல. ஆலை முதலாளிகள் தங்கள் உடைமைகளையும், பாங்கி முதலாளிகள் தங்கள் பணத்தையும், கடை முதலாளிகள் தங்கள் கடைச் சரக்குகளையும் காப்பாற்றிக் கொள்ள முயல்வது போல் இவர்களும் தங்களுக்குப் பரம்பரையாகக் கிடைத்த நில உடைமையைக் காப்பாற்றிக் கொள்ள விரும்புகிறார்கள்.

‘அட்டூழியம்’ புரிகிறவர்கள் வாழ்க்கையில் எல்லாத் துறைகளிலும் இருப்பது போல் தஞ்சை மிராசுதார்களிலும் இரண்டொருவர் இருக்கக் கூடும். இவர்களில் யாரையாவது மனதில் வைத்துக் கொண்டு தஞ்சாவூர் மிராசுதார்களின் பேரில் பொதுப்படையாகக் கல்லை விட்டெறிவது மிகப் பெரிய அநியாயம்.

இதனால் அரசியல் துறையில் லாபம் ஏதாவது உண்டா என்றால், அதுவும் கிடையாது.

தஞ்சை ஜில்லாவில் கம்யூனிஸ்டுகள் ஆனவர்களை, இப்படியெல்லாம் மிராசுதார்களை நாமும் கூடச் சேர்ந்து தாக்குவதினால் சரிக் கட்ட முடியாது. கம்யூனிஸ்டு தலைவர்கள் இதையும் தங்களுக்குப் பெரிதும் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளுவார்கள்.

பொதுவாக, தஞ்சாவூர் மிராசுதார்களில் மிகப் பெரும்பாலோர் தேசிய வாதிகள்; தேச பக்தர்கள்;

காங்கிரஸ் அபிமானிகள். சென்ற ஐம்பது வருஷ காலமாக இவர்கள் தேசிய இயக்கங்களைத் தீவிரமாக ஆதரித்து வந்தவர்கள்.

லட்சக்கணக்கான ஏழை மிராசுதார்களும் ஆயிரக் கணக்கான நடுத்தர மிராசுதார்களும் சென்ற சில வருஷங்களில் அதிகாரிகளின் கொள்முதல் அட்டூழியங்களுக்கு உள்ளான படியினால்தான் சென்ற பொதுத் தேர்தலில் அசிரத்தையாக இருந்து விட்டார்கள். தஞ்சை ஜில்லாவில் காங்கிரஸின் தோல்விக்கு இது ஒரு முக்கிய காரணம் என்பதை யாரும் மறுக்க முடியாது.

ஏற்கெனவே கஷ்டப்பட்டு மனம் வெறுத்துப் போயிருக்கிறவர்களை புண்படுத்தவேண்டியதில்லை.

நில உரிமை சம்பந்தமான சீர்திருத்தம் தாராளமாய்ச் செய்யுங்கள். சட்ட பூர்வமாகவும் மாகாணம் முழுவதற்கும் பொதுவாகவும் எந்தச் சீர்திருத்தத்தைச் செய்தாலும் தஞ்சை மிராசுதார்கள் உற்சாகமாக வரவேற்பார்கள்.

தஞ்சை மிராசுதார்களை மட்டும் தனியாகப் பொறுக்கி எடுத்து அவர்களுடைய தலையில் கல்லைத் தூக்கிப் போட வேண்டாம்!

அதற்கு அவசியமும் இல்லை: நியாயமுமாகாது.

# சினிமாப் பார்க்க வருவோர் யார்?

நல்ல முறையில் நடத்தப்பட்டு வரும் சினிமாப் பத்திரிகைகளில் "குண்டூசி" தென்னாட்டில் சிறந்து விளங்குகிறது. இந்தப் பத்திரிகை ஒரு புதிய ரஸமான பொருள் பொதிந்த சொற்றொடரை இம்மாத இதழில் உபயோகித்திருக்கிறது. அதுதான் 'படாதிபதி' என்பது. ஆங்கிலத்தில் 'புரொட்யூஸர்' என்று சொல்லப்படும் மர்ம மனிதருக்குத் தமிழில் பொருத்தமான பெயர் இதுவரையில் அமையவில்லை. "சினிமா முதலாளி" என்பது அவ்வளவு சரியாக இல்லை. ஏனெனில், மூலதனம் ஒன்றும் இல்லாமலே வேறுவித சாதனங்களை வைத்துக் கொண்டு படம் எடுப்பவர்களும் உண்டு. ஆதலின் "படாதிபதி" வெகு பேஷான பெயர். மத விஷயங்களில் மடாதிபதிகள் எப்படி ஆதிக்கம் செலுத்துகிறார்களோ, அப்படியே படாதிபதிகளும் பேசும்பட உலகத்தில் ஆதிக்கம் பெற்று விளங்குகிறார்கள். அவர்கள் வார்த்தைக்கு மறு வார்த்தை கிடையாது. அவர்கள் சொன்னால் சொன்னதுதான்! தட்டிப் பேசுவதற்கு யாராலும் முடியாது.

இந்தியாவிலுள்ள படாதிபதிகளுக்குள் தலைமைப் படாதிபதியான ஸ்ரீ சண்டுலால் ஷா என்பவர் சமீபத்தில் சென்னைக்கு விஜயம் செய்திருந்தார். இந்திய பிலிம் பெடரேஷன் (Film Federation of India) என்னும் அகில இந்திய படாதிபதிகள் ஸ்தாபனத்தின் அக்கிராசனர் அவர். மேற்படி ஸ்தாபனத்தின் நிர்வாக சபைக் கூட்டம் சென்ற வாரத்தில் சென்னையில் நடந்தது. அதற்காக வந்திருந்தார். நடவடிக்கைகள் இரகசியமாக நடந்தன. பின்னர் அந்த நடவடிக்கைகளை வெளிப்படுத்துவதற்காகப் பத்திரிகையாளரை அழைத்தார். மேற்படி கூட்டத்தில் நிறைவேறிய தீர்மானங்களை வெளியிட்டார். பம்பாயில் வருகிற ஜூன் மாதத்தில் அகில இந்திய பிலிம் மகாநாடு நடத்தப்படும் என்பது தீர்மானங்களில் ஒன்று. மற்றும், சினிமா வரியைக் குறைக்க வேண்டும். செய்திச் சுருள்களைக் காட்ட வேண்டுமென்று சர்க்கார் கட்டாயப் படுத்தக் கூடாது என்பவை போன்ற வழக்கமான தீர்மானங்கள் மற்றவை. இவற்றைக் குறித்து நாம் இப்போது ஒன்றும் சொல்ல வேண்டியதில்லை.

கடைசியாக, படாதிபதி சண்டுலால் ஷா "சினிமாப் பார்க்க வருவோர் யார்?" என்பது பற்றி வெளியிட்டிருக்கும் அபிப்பிராயம்தான் மிக முக்கியமானது. அது சினிமாத் துறையில் சிரத்தையுள்ளவர்களையெல்லாம் ஒரேயடியாகத் தூக்கிவாரிப் போடக் கூடியது.

சினிமா சமூகத்துக்கு எவ்வளவு பெரிய தொண்டு செய்கிறது. சர்க்கார் ஏன் சினிமாத் தொழிலை ஆதரித்து விசேஷ சலுகைகள் காட்ட வேண்டும் என்பதற்குக் காரணமாகவே, படாதிபதி சண்டுலால் ஷா அந்த அபிப்பிராயத்தை வெளியிட்டிருக்கிறார். "ஹிந்து" பத்திரிகை மே 9உ இதழில் அது ஐந்தாம் பக்கத்தில் வெளியாகியிருக்கிறது. கேளுங்கள்:—

"இந்தியாவின் சீர்திருத்தக்காரர்கள் சிலர் சினிமாத் தொழிலைத் துவேஷிக்கிறார்கள். தேசத்தில் உள்ள சினிமாக் கொட்டகைகளையெல்லாம் மூன்று மாதம் மூடி வைத்து விட்டு அதன் பலன்களை அவர்கள் பார்க்கட்டும்! சமூகத்திலுள்ள காலிகள் அப்போது வெளியில் வந்து எல்லாவிதக் காலித்தனங்களையும் செய்வார்கள். சினிமாக் கொட்டகைக்காரர்கள் உண்மையில் இராஜ்யத்தின் போலீஸ்காரர்களாகத் தொண்டு செய்கிறார்கள். விஷம புத்தியுள்ள காலாடிகளைத் தியேட்டர்களுக்குள் அடைத்து வைத்திருக்கிறார்கள். அப்படிச் செய்யாவிட்டால் மேற்படி காலாடிகள் வீதிகளில் புகுந்து தங்கள் திருவிளையாடல்களைப் புரிவார்கள்!"

இப்படிச் சொல்லியிருக்கிறார் படாதிபதி சண்டுலால் ஷா. இதுவரைக்கும் சினிமாக்களினால் சமூகத்துக்கு ஏற்படும் நன்மைகளைப்பற்றிப் பலர் பல விதமாகப் பேசியிருக்கிறார்கள். ஆனால் படாதிபதி சண்டுலால் ஷாவைப்போல் பசுமரத்தில் ஆணி அடிப்பதுபோல் இவ்வளவு பச்சையாக உண்மையை வெளியிட்டதில்லை!

சினிமா ரஸிகர்களின் சங்கம் என்று ஏற்படுத்தி நடத்தி வருகிறார்களே அவர்கள் இந்தக் கருத்தைப்பற்றி என்ன சொல்வார்களோ தெரியாது. மற்றும் சினிமா விசிறிகள் பலருக்கும் ஒரு வேளை இது கசப்பாக இருக்கலாம்.

ஆனால் படாதிபதிகளின் தலைமைப் படாதிபதி சொல்வதை நாம் அவ்வளவு இலேசாக மறுதளித்துவிட முடியுமா! அதை ஆராய்ந்து பார்க்கத்தான் வேண்டும்.

"சினிமாப் பார்க்க வருகிறவர்கள் சமூகத்தின் காலாடிகள்" என்பது படாதிபதி சண்டுலால் ஷாவின் கருத்து.

"அத்தகைய காலாடிகளை மாலை நேரங்களில் கொட்டகைக்குள் அடைத்துப் போட்டிருப்பதினால் சினிமா சமூகத்துக்குப் பெரிய உதவி செய்து வருகிறது" என்பதும் அவருடைய அபிப்பிராயம்.

இந்தக் கருத்தை வைத்துக்கொண்டு பார்க்கும் போது சினிமாப் படங்கள் எவ்வளவு அதிகமாக உற்பத்தியாகின்றனவோ, அவ்வளவுக்கு நன்மை. படங்கள் எவ்வளவுக்கு நீளமாக இருக்கின்றனவோ, அவ்வளவுக்கு நல்லதுதான்! நீளத்தைக் கட்டுப்படுத்தவோ, நேரத்தைக் கட்டுப்படுத்தவோ சிறிதும் அவசியமில்லை. எவ்வளவு நேரம் கொட்டகையில் காலிகளை அடைத்துப் போட்டிருக்கிறார்களோ, அவ்வளவுக்கு நல்லது அல்லவா! இரண்டு மணி நேரப் படத்தைக் காட்டிலும் மூன்று மணி நேரப் படம் அதிக சமூக சேவை செய்கிறது. நாலரை மணி நேரம் ஓடும் படம் மூன்று மணிப் படத்துக்குமேல் 100-க்கு 50 விதம் அதிகமான சேவை செய்கிறது!

சாதாரணமாக இப்போதெல்லாம் நடக்கும் மூன்று காட்சிகளைத் தவிர நாலாவதாக நள்ளிரவுக் காட்சி ஒன்று ஏற்படுத்தினாலும் நன்றாயிருக்கும். இரவு பன்னிரண்டு மணிக்கு ஆரம்பித்துக் காலையில் நாலு மணிக்கு முடித்தால், போலீஸாருக்கு இன்னும் எவ்வளவோ சௌகரியமாயிருக்கும். இராத்திரியில் போலீஸ் ரோந்து சுற்ற வேண்டிய அவசியமே இராதல்லவா !

* * *

படாதிபதி சண்டுலால் ஷாவின் கருத்தை அப்படியே ஒப்புக் கொள்வதாயிருந்தால் அதில் சில தர்மசங்கடங்கள் ஏற்படுகின்றன. சமூகத்தில் உள்ள காலிகளைத் தவிர காலிகளல்லாதார் சிலரும் தப்பித் தவறி சினிமாப் பார்க்க வந்து விடலாம். அவர்களுடைய கதி என்ன ! காலிகளோடு சேர்த்து மற்றவர்களையும் மணிக் கணக்காக அடைத்து வைத்தால், அவர்களும் காலிகள் ஆகிவிடக் கூடும் அல்லவா ! இதை எப்படித் தடை செய்வது !

அதிலும், காலிகளுக்கு உற்சாகம் ஊட்டுவதற்காகவே எடுக்கப்பட்ட படமாகவும் இருந்து விட்டால் இந்த அபாயம் பன்மடங்கு அதிகமாகி விடுகிறது. உதாரணமாக, 'அவாரா' என்னும் பிரபல ஹிந்திப் படத்தில் கதாநாயகன் பிரமாதமான 'ஜேப்படி' வேலைகள் செய்கிறான். வீதியில் போய்க் கொண்டேயிருக்கும்போது எதிரில் வருபவனுடைய சட்டைப் பையில் கையைவிட்டு வெகு லாகவமாகப் பணப் பையைக் கவர்ந்து கொள்கிறான். இம்மாதிரி ஒவ்வொரு தடவையும் அவன் செய்யும்போது சினிமாக் கொட்டகையில் சில பகுதிகளில் அபார ஆரவாரம் உண்டாகிறது. இளம்பிள்ளைகள்—மாணாக்கர்கள் பலர்—மேற்படி 'அவாரா' படத்தைப் போய்ப் பார்த்துவிட்டு வருகிறார்கள். கதாநாயகனுடைய 'ஜேப்படி' வேலைத் திறனைக் குறித்துப் பேசி வியக்கிறார்கள். யோக்கியமான தொழில் செய்து பிழைப்பதைக் காட்டிலும் 'ஜேப்படி' வேலை செய்து பிழைப்பது அதி ரஸமானது என்று இளம் பிள்ளைகளின் மனத்தில் பதிந்து போகக் கூடும் அல்லவா !

இத்தகைய அபாயத்தை முன்னிட்டு, சினிமாப் படங்களையும் சினிமாக் கொட்டகைகளையும் இரண்டு பிரிவாகப் பிரித்து, "காலிகளுக்கு மட்டும்" "காலிகளல்லாதவர்களுக்கு மட்டும்" என்று விளம்பரப்படுத்துவது அவசியமாகலாம் !

நம்மைப் பொறுத்த வரையில், படாதிபதி சண்டுலால் ஷாவின் கருத்தை நாம் சிறிதும் ஒப்புக் கொள்ளவில்லையென்று சொல்லித் தீரவேண்டியிருக்கிறது. சினிமாப் படங்கள் எடுப்பதின் நோக்கமும் அவற்றின் உபயோகமும் படாதிபதி சண்டுலால் ஷா கூறுகிறவை அல்ல என்பது நம் தாழ்மையான அபிப்பிராயம். நம் நாட்டில் சினிமாப் பார்க்கப் போகிறவர்களில் மிகப் பெரும்பான்மையோர் காலித்தனம் இன்னதென்று அறியாத பரம சாதுக்கள். அவர்களில் பெண்மணிகள் பெரும் பகுதியினர். நாடோடி வாழ்க்கையின் சங்கடங்களை மறந்து சிறிது நேரம் உற்சாகமாகப் பொழுது போக்கி விட்டு வரலாம் என்பதற்காகவே மிகப் பெரும்பாலோர் சினிமாக்களுக்குப் போகிறார்கள். காலிக் கூட்டம் அவர்களில் மிக மிகச் சிறு பகுதியாகத்தான் இருக்கக் கூடும். இவர்களைச் சில மணி நேரம் கொட்டகையில் அடைத்து வைப்பது படாதிபதிகள் சமூகத்துக்குச் செய்யும் பெரிய சேவையாகாது. இத்தகைய எண்ணம் உடையவர்கள் எடுக்கும் படங்கள் மிக மிக மட்டரகமாகவும் மக்களைக் கீழே இழுத்துத் தாழ்த்தும் போக்கிலுந்தான்' அமைய முடியும்.

சினிமாப் பார்க்க வருவோர் யோக்கியமாக வாழ்க்கை நடத்தும் பிரஜைகள் என்ற அடிப்படையிலேயே படாதிபதிகள் படங்களை எடுக்க வேண்டும். குற்றமற்ற முறைகளில் மக்களுக்குக் களிப்பூட்டும் படங்கள், உயர்ந்த இலட்சியங்களுடன் கூடிய சமூகத்தை உயர்த்தும் படங்கள், அயல் நாடுகளில் நாம் பெருமையுடன் திரையிடக் கூடிய மேன்மையான படங்கள், — இத்தகைய படங்களையே எடுத்துக் காட்ட வேண்டும்.

இவ்விதமான படங்களை எடுத்து விட்டு, "நாங்கள் தேசத்துக்கும் சமூகத்துக்கும் சேவை செய்கிறோம் ; எங்களுக்குச் சலுகை காட்டுங்கள்" என்று நம் சுதந்திர அரசாங்கத்தாரிடம் கோரினால், அந்தக் கோரிக்கைக்குப் பொதுமக்களின் பூரண ஆதரவு இருக்கும்.

"காலிகள் வீதிகளில் புகுந்து அட்டூழியம் செய்யாமல் சினிமாக் கொட்டகைகளில் அடைத்து வைக்கிறோமே ! இந்தப் போலீஸ் வேலை செய்வதற்காக எங்களுக்குச் சலுகை காட்டுங்கள்" என்று கோருவது, உலகம் சிரிக்கக்கூடிய மிக விசித்திரமான கோரிக்கையாகும் !

## அட்டைப்பட விளக்கம்

சின்னஞ் சிறு பிராயத்திலே அவளும் அவனும் மரப்பாச்சிப் பொம்மைகளை வைத்துக் கல்யாணம் நடத்தி விளையாடியிருக்கிறார்கள். அந்த விளையாட்டின் போது, அவன் எத்தனையோ பாடல்கள் பாடுவான். அவளும் பாடுவாள். அப்பொழுதெல்லாம் அந்தப் பாடல்களின் பொருள் அவர்களுக்குப் புரியாது. இருந்தாலும் பாடிவிட்டு இருவரும் கல கல என்று சிரிப்பார்கள் !

ஆனால் அவள் இப்பொழுது வயது வந்த பெண். அப்படியெல்லாம் விளையாட முடியுமா !

ஒரு நாள் மாலை நேரத்தில் இடுப்பில் ஒரு கூடையும், அந்தக் கூடையில் இரண்டு சட்டிப் பானைகளையும் எடுத்துக் கொண்டு வயல் வரப்பு வழியாகப் போனாள். அப்பொழுது காற்றில் மிதந்து ஒரு குரல் வந்தது. அவன் குரல்தான் ! பாட்டு, அந்த நாளில் அவன் பாடிய பாட்டுத்தான் !!

அந்தப் பாடல் காதில் விழுந்ததும் அவள் கால்கள் மேலே அடி எடுத்து வைக்கச் சற்றுத் தடுமாறின. முன்பு அந்தப் பாட்டைக் கேட்டுச் சிரித்த அவளால், இப்பொழுது அப்படிச் சிரிக்க முடியவில்லை. அதற்கு மாறாக அவன் பாட்டின் கருத்து காரியாம்சத்தில் நிறைவேறுமா என்ற ஏக்கம்தான் முகத்தில் பிரதிபலித்தது !

அப்படியெல்லாம் அவளுக்கு உணர்ச்சி ஊட்டும்படி அவன் பாடிய பாட்டு இதுதான் :

அத்தை மகள் உத்தமியைக் கொள்ளவே வேணும்
அழகான சிறுதாலி கட்டவே வேணும் !

கடவுளைப் பலநாளும் தொழுவே வேணும்
கவிதீரப் பிள்ளையைப் பெறவே வேணும் !

குலம் விளங்கக் கிருஷ்ணனென்(று) அழைக்கவே வேணும்
குதலைச் சொல் கேட்டுமிக மகிழவே வேணும் !




அத்தியாயம் 26

## அநிருத்தரின் பிரார்த்தனை

முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மராயர் வீற்றிருந்த பல்லக்கு நிலா முற்றத்தில் கூடியிருந்த ஜனக் கூட்டத்தைப் பிளந்து வழி ஏற்படுத்திக் கொண்டு வந்தது. இரு பக்கமும் விலகி நின்ற மக்கள் முதன் மந்திரியிடம் தங்களுடைய மரியாதையைத் தெரிவித்துக் கொண்டார்கள். பலர் இளவரசரைப் பற்றிய தங்கள் கவலையையும் வெளியிட்டார்கள். முதன் மந்திரியும் கவலை தங்கிய முகத்துடனே தான் தோன்றினார். ஆனாலும் இரு கைகளையும் தூக்கி ஜனங்களுக்கு ஆறுதலும் ஆசியும் கூறும் பாவனையில் சமிக்ஞை செய்து கொண்டு சென்றார். அரண்மனைக் கட்டிடத்தின் முகப்பை அடைந்ததும் பல்லக்கு கீழே இறக்கப்பட்டது. முதன் மந்திரி வெளி வந்து முதலில் மேலே நோக்கினார். பெரிய ராணியும் இளவரசியும் அங்கே நிற்பதைப் பார்த்து வணக்கம் செலுத்தினார். பிறகு, துவந்த யுத்தம் நடந்த இடத்தை நோக்கினார். இவ்வளவு நேரமும் தங்களைச் சுற்றி நடப்பது ஒன்றையும் தெரிந்து கொள்ளாமல் வந்தியத்தேவனும் பினாகபாணியும் சண்டை போட்டுக் கொண்டிருந்தார்கள். ஆழ்வார்க்கடியான் இதற்குள் இறங்கி வந்து முதன் மந்திரியின் காதருகில் ஏதோ சொன்னான். அவர் தம் முன் வந்த சேவகர்களைப் பார்த்து, "அரண்மனை முற்றத்தில் கலகம் செய்யும் இந்த முரடர்களை உடனே சிறைப் படுத்துங்கள்!" என்று கட்டளையிட்டார். சேவகர்களுடன் ஆழ்வார்க்கடியானும் கூட்டத்தைப் பிளந்து கொண்டு சென்றான். சண்டை போட்ட இருவரையும் சேவகர்கள் கைப்பற்றி அவர்களுடைய கைகளை வாரினால் பிணைத்தார்கள். ஆழ்வார்க்கடியான் வந்தியத் தேவனை நோக்கி ஜாடை செய்யவே அவன் தன்னைச் சிறைப்படுத்தும் போது சும்மாயிருந்தான்.

அநிருத்தர் மேல் மாடத்துக்குச் சென்றார். அங்கு நின்றபடி ஜனங்களைப் பார்த்து "உங்களுடைய கவலையையும் கோபத்தையும் நான் அறிவேன். சக்கரவர்த்தியும் ராணிமார்களும் உங்களைப் போலவே துயரத்தில் ஆழ்ந்திருக்கிறார்கள். அவர்களுடைய கவலையை அதிகப்படுத்தும்படியான காரியம் எதுவும் நீங்கள் செய்ய வேண்டாம். இளவரசரைத் தேடுவதற்கு வேண்டிய ஏற்பாடு செய்திருக்கிறது. நீங்கள் எல்லாரும் அமைதியாக வீடு திரும்புங்கள்!" என்று கூறினார்.

"சக்கரவர்த்தியை நாங்கள் பார்க்க வேண்டும். சக்கரவர்த்தி பழையாறைக்குத் திரும்பி வர வேண்டும்" என்று கூட்டத்தில் ஒருவர் கூவினார்.

"இலங்கையில் உள்ள எங்கள் ஊர் வீரர்கள் கதி என்ன?" என்று இன்னொருவர் கேட்டார்.

"சக்கரவர்த்தி தஞ்சை அரண்மனையில் பத்திரமாயிருக்கிறார். அவர் தங்கியுள்ள அரண்மனையை இப்போது வேளக்காரப் படையினர் இரவு பகல் காவல் புரிகின்றனர். கூடிய சீக்கிரத்தில் சக்கரவர்த்தியை இந்த நகருக்கு நானே அழைத்து வருகிறேன். இலங்கையில் உள்ள நம் வீரர்களைப் பற்றியும்




உங்களுக்குக் கவலை வேண்டாம். ஈழத்துப் போர் நமக்குப் பூரண வெற்றியுடன் முடிந்து விட்டது. நம் வீரர்கள் விரைவில் திரும்பிவந்து சேருவார்கள்!" என்று முதன் மந்திரி அறிவித்ததும் கூட்டத்தில் பெரும் உற்சாக ஆரவாரம் ஏற்பட்டது. சுந்தர சோழரையும் அன்பில் அநிருத்தரையும் வாழ்த்திக் கொண்டு ஜனங்கள் திரும்பலானார்கள்.

முதன் மந்திரி பெரிய மகாராணியைப் பார்த்து "தேவி! தங்களிடம் மிக முக்கியமான விஷயங்களைப் பற்றிப் பேசவேண்டும்! அரண்மனைக்குள் போகலாமா?" என்றார். இளவரசியைத் திரும்பிப் பார்த்து "அம்மா! உன்னிடம் பிற்பாடு வருகிறேன்" என்று கூறியதும், குந்தவை தன்னுடைய இருப்பிடத்துக்குப் புறப்பட்டாள். அவளுடைய மனத்தில் இப்போது பல கவலைகள் குடிகொண்டன. சோழ சாம்ராஜ்யத்தில் யாராவது ஒருவரிடம் குந்தவை பயம் கொண்டிருந்தாள் என்றால், அவர் முதன் மந்திரி அநிருத்தர்தான். கழுகுப் பார்வையுள்ள மனிதர் அவர். புறக்கண்களினால் பார்ப்பதைத் தவிர, எதிரேயுள்ளவர்களின் நெஞ்சிலும் ஊடுருவிப் பார்த்து அவர்களுடைய அந்தரங்க எண்ணங்களை அறியும் ஆற்றல் படைத்தவர். அவருக்கு எவ்வளவு தெரியும், எவ்வளவு தெரியாது, அவரிடம் எதைச் சொல்லலாம், எதைச் சொல்லாமல் விடலாம் என்பதைப் பற்றி




இளைய பிராட்டிக்கு ஒரே குழப்பமாயிருந்தது. வாணர்குல வீரனையும் பினாகபாணியையும் சேர்த்து அவர் சிறைப்படுத்தும்படி கட்டளையிட்டது இளவரசிக்கு ஆத்திரத்தை உண்டு பண்ணியது. அதை வெளிக் காட்டிக் கொள்ளவும் முடியவில்லை. அந்த மாபெரும் ஜனக் கூட்டத்தின் முன்னால் வந்தியத் தேவனுக்குப் பரிந்து பேசவும் முடியவில்லை. "என்னிடம் பிற்பாடு வரப் போகிறாராமே? வரட்டும்; ஒரு கை பார்த்துவிடுகிறேன்!" என்று மனத்தில் கருவிக் கொண்டே தன் அந்தப்புரத்தை நோக்கி விரைந்து சென்றாள்.

* * *

செம்பியன்மாதேவி சோழ சாம்ராஜ்யத்தில் அனைவருடைய பயபக்தி மரியாதைக்கும் உரியவராயிருந்தவர். முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மராயரும் அதற்கு விலக்கானவர் அல்ல. ஆனாலும் அம்மூதாட்டி இச்சமயம் ஏதோ ஒருவித பயத்துடனேயே நடந்து கொண்டார். அநிருத்தர் ஆசனத்தில் அமர்ந்த பிறகே தாம் அமர்ந்தார்.

"ஐயா! சில காலமாக என் தலையில் இடிமேல் இடியாக விழுந்து கொண்டிருக்கிறது. நீரும் அத்தகைய செய்தி ஏதேனும் கொண்டு வந்தீரா? அல்லது ஆறுதலான வார்த்தை சொல்லப் போகிறீரா!" என்று வினவினார்.

"அம்மணி! மன்னியுங்கள்! தங்கள் கேள்விக்கு என்றால் விடை

சொல்ல முடியவில்லை. நான் கொண்டு வந்திருக்கும் செய்தியைத் தாங்கள் ஏற்றுக் கொள்ளும் விதத்தைப் பொறுத்திருக்கிறது!'' என்றார் தந்திரத்தில் தேர்ந்த முதன் மந்திரி.

''பொன்னியின் செல்வனைப் பற்றிய செய்தி உண்மைதானா, ஐயா! என்னால் நம்பவே முடியவில்லையே? அருள்மொழி வர்மனைப் பற்றி நாம் என்னவெல்லாம் நம்பிக் கொண்டிருந்தோம்? இந்த உலகத்தையே ஒரு குடை நிழலில் ஆளப் பிறந்தவன் என்று நாம் எத்தனை தடவை பேசியிருக்கிறோம்?......''

''பெருமாட்டி! ஜோசியர்கள் அவ்விதம் சொல்வதாகத் தாங்கள் என்னிடம் கூறியது உண்மைதான். அடியேன் தங்களை மறுத்தும் பேசியதில்லை; ஒத்துக் கொண்டும் பேசியதில்லை!''

''அது போகட்டும்; இப்போது சொல்லுங்கள். பொன்னியின் செல்வனைச் சமுத்திர ராஜன் கொள்ளை கொண்டு விட்டது நிச்சயந்தானா?''

''நிச்சயம் என்று யார் சொல்ல முடியும், தாயே! அம்மாதிரி செய்தி நாடு நகரமெங்கும் பரவியிருப்பது நிச்சயம்.''

''அது உண்மை என்று ஏற்பட்டால், இந்தச் சோழ நாட்டின் கதி என்ன? எத்தகைய விபரீதங்கள் ஏற்படும்?''

''விபரீதங்கள் அது உண்மை என்று ஏற்படும் வரையில் காத்திருக்கப் போவதில்லை என்று தோன்றுகிறது......''

''ஆம், ஆம்! விபரீதம் நேரிடுவதற்கு வதந்தியே போதுமானதுதான். இந்தப் பழையாறை நகர மக்கள் இவ்வளவு ஆத்திரங் கொண்டு திரளாக அரண்மனைக்குள் பிரவேசித்ததை இதுவரையில் நான் பார்த்ததில்லை......''

''பழையாறையில் மட்டுந்தான் இப்படி நடந்ததென்று கருத வேண்டாம். தஞ்சாவூர் நகரம் நேற்று முதல் அல்லோல கல்லோலமாயிருக்கிறது. வேளக்காரப் படையினர் சக்கரவர்த்தியின் அரண்மனையை விட்டு நகர மறுத்து விட்டார்கள். மக்கள் கோட்டைக்குள் திரள் திரளாகப் புகுந்து பழுவேட்டரையர்களின் மாளிகைகளைச் சூழ்ந்து கொண்டார்கள். மதங் கொண்ட யானைகளை ஜனங்கள் பேரில் ஏவி விட்டு அவர்களைக் கலைந்து போகும்படி செய்ய வேண்டியதாயிற்று...''

''ஐயோ! இது என்ன விபரீதங்கள்! எத்தகைய பயங்கரமான செய்தி?''

''மதுராந்தகர் பழையாறைக்கு வந்து விட்டதே நல்லதாய்ப் போயிற்று. இல்லாவிடில் அந்தப் பயங்கரமான பழி அவரையும் சேர்ந்திருக்கும்......''

''ஐயா! மதுராந்தகன் எப்படி மாறிப் போயிருக்கிறான் என்று தெரிந்தால் தாங்கள் ஆச்சரியப் பட்டுப் போவீர்கள்.''

''ஆச்சரியப்பட மாட்டேன், தாயே! அவை எல்லாம் எனக்குச் சில காலமாகத் தெரிந்த விஷயந்தான்.''

''தெரிந்திருந்தும் அவனுடைய மனத்தை மாற்றத் தாங்கள் ஒரு முயற்சியும் செய்யவில்லை! இப்போதாவது யோசனை சொல்லி உதவுங்கள்!''

''அம்மணி! மதுராந்தகருடைய மனத்தை மாற்ற வேண்டிய அவசியம் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. அவருடைய கட்சியை ஆதரித்துப் பேசவே நான் வந்திருக்கிறேன்......''

''அப்படியென்றால்? எனக்கு விளங்கவில்லை, ஐயா!''

''அம்மணி! மதுராந்தகர் இந்தச் சோழ சிங்காதனம் தமக்கு உரியது என்று கருதுகிறார். சக்கரவர்த்திக்குப் பிறகு தாம் இந்த இராஜ்யத்தை ஆள வேண்டுமென்று ஆசைப்படுகிறார். அது நியாயமான ஆசை. நன்றாக அவர் மனத்தில் வேரூன்றி விட்ட ஆசை. அதைத் தடுக்க முயல்வதினால் சோழ ராஜ்யத்துக்கு நன்மை ஏற்படாது. அதை நிறைவேற்றி வைப்பதுதான் உசிதம்...''

''ஐயோ! இது என்ன வார்த்தை? நீர் கூடவா சோழ சக்கரவர்த்திக்குத் துரோகம் செய்யத் துணிந்து விட்டீர்? இது என்ன விபரீத காலம்?''

''பெருமாட்டி! சக்கரவர்த்திக்குத் துரோகம் செய்ய நான் கனவிலும் கருதியதில்லை. சக்கரவர்த்தியின் கட்டளையின் பேரிலேயே வந்தேன். அவர் தங்களிடம் விண்ணப்பித்துக் கொள்ளச் சொன்னதைத்தான் சொல்கிறேன். சக்கரவர்த்தியின் காலத்துக்குப் பிறகு மதுராந்தகர் சிங்காதனம் ஏற விரும்புகிறார். பழுவேட்டரையர்கள் அதற்காகச் சதி செய்கிறார்கள். ஆனால் சக்கரவர்த்தி இப்போதே மதுராந்தகருக்கு முடி சூட்டிவிட்டுச் சிங்காதனத்திலிருந்து விலகிக் கொள்ள விரும்புகிறார். இதற்குத் தங்கள் சம்மதத்தைப் பெற்று வரும்படி என்னை அனுப்பியிருக்கிறார்......''

''சக்கரவர்த்தி அவ்விதம் செய்ய விரும்பலாம். ஆனால் அதற்கு என்னுடைய சம்மதம் ஒருநாளும் கிட்டாது. என் பதியின் விருப்பத்துக்கு விரோதமான இந்தக் காரியத்தை நான் ஒப்புக்கொள்ள

மாட்டேன். கல்விக் கடலின் கரை கண்ட முதல் அமைச்சரே! சக்கரவர்த்தியே சொன்னாலும் தாம் இந்த முறை தவறான காரியத்தை என்னிடம் சொல்ல எப்படி வந்தீர்? சோழ சிங்காதன உரிமையைப் பற்றித் தமக்கும் எனக்கும் மட்டும் தெரிந்த சில உண்மைகள் இருக்கின்றன வென்பதை நீர் அடியோடு மறந்து விட்டீரோ......?"

"அம்மணி! நான் எதையும் மறக்கவில்லை. தங்களுக்குத் தெரியாத சில உண்மைகளும் எனக்குத் தெரியும். ஆகையினாலேயே சக்கரவர்த்தியின் தூதனாகத் தங்களிடம் வந்தேன்......"

"ஐயா! தங்களுடைய மதி நுட்பமும் இராஜ தந்திரமும் உலகம் அறிந்தவை. அவற்றைப் பெண் பாலாகிய என்னிடம் காட்ட வேண்டாம்......"

"பெருமாட்டி! தங்களிடம் நான் வாதமிட வரவில்லை. என் சாமர்த்தியத்தைக் காட்டுவதற்கும் வரவில்லை. இந்தச் சோழ நாட்டைப் பேரபாயத்திலிருந்து காப்பாற்றி அருளும்படி மன்றாடிப் பிரார்த்தனை செய்ய வந்தேன்......"

"தங்கள் பிரார்த்தனையைப் பிறைசூடும் பெருமானிடம் செலுத்திக் கொள்ளுங்கள். அல்லது தங்கள் இஷ்ட தெய்வமான விஷ்ணு மூர்த்தியிடம் பிரார்த்தனை செய்யுங்கள்......"

"ஆம், தாயே! தாங்கள் பெரிய மனது செய்யாமற் போனால், அம்பலத்தானும் அரங்கத்தானும்தான் இந்த நாட்டைக் காப்பாற்ற வேண்டும்."

"அப்படி என்ன ஆபத்து இந்த நாட்டுக்கு வந்து விட்டது? மதுராந்தகன் சிங்காதனம் ஏறுவதால் அதை எப்படித் தடுக்க முடியும்?"

"கேளுங்கள், பெருமாட்டி! இன்றைக்கு இந்நகரமாந்தர் கொதித்தெழுந்ததுபோல் காஞ்சிபுரத்திலிருந்து இராமேசுவரம் வரை உள்ள மக்கள் இன்னும் இரண்டு மூன்று நாளைக்குள் ஆத்திரமடைந்து கொதித்தெழுவார்கள். அத்துடன் முடிந்து விடாது. இலங்கையிலிருந்து பூதி விக்கிரமகேசரி ஏற்கெனவே படை திரட்டிக் கொண்டு புறப்பட்டு விட்டார் என்று அறிகிறேன். ஆதித்த கரிகாலனுக்குச் செய்தி எட்டும்போது அவனும் பொறுக்க மாட்டான். வட திசைச் சைன்யத்துடன் தஞ்சையை நோக்கிக் கிளம்புவான். பழுவேட்டரையர்களும் மற்றச் சிற்றரசர்களும் ஏற்கெனவே படை திரட்டிக் கொண்டிருக்கிறார்கள். கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் நடந்த யுத்தத்தைப் போன்ற பயங்கரமான தாயாதிச் சண்டை இந்த நாட்டில் நடைபெறும். தங்களுடைய உற்றார் உறவினர் எல்லாரும் அழிந்து படுவார்கள். இதையெல்லாம் தாங்கள் பார்த்துக் கொண்டிருக்கப் போகிறீர்களா?......"

"ஐயா! மதிநுட்பம் மிகுந்த முதல் மந்திரியே! எனக்கு உற்றார் உறவினர் என்று யாரும் இல்லை. மேற்கே மலை நாட்டில் அவதரித்த சங்கரர் என்ற மகா புருஷரைப் பற்றித் தாங்கள் கேள்விப்பட்டிருப்பீர். அந்த மகான்,

'மாதாச பார்வதீ தேவி
பிதா தேவோ மகேச்வர:
பாந்தவா: சிவபக்தாஸ்ச'

என்று அருளியிருக்கிறார். என்னுடைய அன்னை பார்வதி தேவி; என் தந்தை பரமசிவன்; என் உற்றார் உறவினர் சிவ பக்தர்கள். இந்த உலகில் வேறு பந்துக்கள் எனக்கு இல்லை......"

"அம்மணி! அதே சுலோகத்தில் சங்கரர் அருளியுள்ள நாலாவது வாக்கியத்தைத் தங்களுக்கு நினைவூட்டுகிறேன்.

'ஸ்வதேசோ புவனத்ரய:'

என்றும் அவர்தான் சொல்லியிருக்கிறார். நாம் பிறந்த தேசந்தான் நமக்கு மூன்று உலகமும். தங்களுடைய சொந்த நாடு உள் நாட்டுச் சண்டையினால் அழிந்து போவதைத் தாங்கள் பார்த்துக் கொண்டிருப்பீர்களா?"

"என்னுடைய சொந்த தேசம் எனக்கு மூன்று உலகத்தையும் விட அருமையானதுதான். ஆனால் இந்தச் சாண் அகலத்துச் சோழ நாடுதான் நம்முடைய சொந்த நாடா? ஒருநாளுமில்லை. வடக்கே கைலயங்கிரி வரையில் உள்ள நாடு என்னுடைய நாடு. சோழ நாட்டில் இடமில்லா விட்டால் நான் காசி க்ஷேத்திரத்துக்குப் போவேன். காஷ்மீரத்துக்கும் கைலாசத்துக்கும் போவேன். அப்படி யாத்திரை கிளம்பும் யோசனை எனக்கு வெகுநாளாக உண்டு. அதற்கு உதவி செய்யுங்கள்......"

"தாயே! தெற்கே திரிகோண மலையிலிருந்து, வடக்கே இமோத்கிரி வரையில் உள்ள தேசம் நமது ஸ்வதேசம் என்று ஒத்துக் கொள்கிறேன். இப்படிப் பரந்துள்ள பாரத புண்ணிய பூமிக்குத் தற்போது பேரபாயம் நேர்ந்திருக்கிறது. பட்டாணியர்கள், துருஷ்கர்கள், மொகலாயர்கள், அராபியர்கள் என்னும் சாதியினர் பொங்கிக் கிளம்பி எந்தப் புது நாட்டைக் கைப்பற்றலாம் என்று

புறப்பட்டிருக்கிறார்கள். ஆயிரம் வருஷங்களுக்கு முன்பு யவனர்களும் ஹூணர்களும் படையெடுத்து வந்தது போல் இந்தப் புதிய மதத்தினர் இப்போது அணி அணியாக இந்நாட்டின் மீது படையெடுக்கப் புறப்பட்டிருக்கிறார்கள். இவர்களுடைய மதம் விசித்திரமான மதம். கோயில்களை இடிப்பதும் விக்கிரகங்களை உடைப்பதும் புண்ணியம் என்று நம்புகிறவர்கள். அம்மணி! இவர்களைத் தடுத்து நிறுத்தக் கூடிய பேரரசர்கள் யாரும் இப்போது வடநாட்டில் இல்லை. சோழ நாட்டு வீரர்கள் கங்கைநதி வரையில், அப்பால் இமயமலை வரையில் சென்று பெரிய பாரத சாம்ராஜ்யத்தை ஸ்தாபிக்கப் போகிறார்கள் என்றும், கோயில்களை இடிக்கும் கூட்டங்களைத் தடுத்து நிறுத்தப் போகிறார்கள் என்றும் அடியேன் கனவு கண்டு வந்தேன். அந்தக் கனவை நனவாக்கத் தாங்கள் உதவி செய்யுங்கள். மதுராந்தகனுக்குப் பட்டம் கட்டச் சம்மதித்துச் சோழ நாட்டில் தாயாதிச் சண்டை ஏற்படாமலிருக்க உதவி புரியுங்கள்!''

இதைக் கேட்ட செம்பியன்மாதேவி சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். பின்னர்,

"ஐயா! ஏதேதோ இந்தப் பேதைப் பெண்ணுக்கு விளங்காத விஷயங்களைச் சொல்லி என்னைக் கலங்க அடித்து விட்டீர்கள். இந்தப் புண்ணிய பாரத பூமிக்கு அப்படிப்பட்ட ஆபத்து நேரிடுவதாயிருந்தால், அதைச் சர்வேசுவரன் பார்த்துத் தடுக்க வேண்டுமே தவிர, இந்த அபலையினால் என்ன செய்ய முடியும்? என்னுடைய கணவர் இறைவனடியைச் சேரும் சமயத்தில் எனக்குச் சொல்லி விட்டுப் போனதை ஒருநாளும் நான் மறக்க மாட்டேன். அதற்கு விரோதமான காரியம் எதுவும் நான் செய்ய மாட்டேன்!'' என்றார்.

"அப்படியானால், இதுவரையில் தாங்கள் அறியாத ஓர் உண்மையை இப்போது நான் தெரியப் படுத்தியாக வேண்டும்!'' என்றார் அநிருத்தர்.

இச்சமயத்தில் மதுராந்தகன் அங்கே தடபுடலாகப் பிரவேசித்து, "அம்மா! இது என்ன நான் கேள்விப்படுவது? அருள்மொழிவர்மனைக் கடல் கொண்டு விட்டதா?'' என்று கேட்டான்.

"பெருமாட்டி! தங்கள் செல்வக் குமாரருக்கு ஆறுதல் சொல்லுங்கள். நான் சொல்ல விரும்பியதை இன்னொரு சமயம் சொல்லிக் கொள்கிறேன்'' என்று முதன் மந்திரி கூறிவிட்டுக் கிளம்பினார்.

அவர் வாசற்படி தாண்டியதும் மதுராந்தகன் "இதோ போகிறாரே, இவர் தான் என்னுடைய முதன்மையான சத்துரு. நான் இங்கிருக்கும் போதே தங்களுக்குத் துர்ப்போதனை செய்ய வந்து விட்டார் அல்லவா?'' என்று இளவரசன் மதுராந்தகன் கூறியது அநிருத்தரின் காதிலும் விழுந்தது.

## அத்தியாயம் 27

# குந்தவையின் திகைப்பு

முதன் மந்திரி அநிருத்தர் குந்தவை தேவியின் அரண்மனையை அடைந்தார். இளவரசி அவரைப் பார்த்ததும் எழுந்து நின்று நமஸ்கரித்தாள்.

"வீரத்திலும் குணத்திலும் சிறந்த கணவனை அடைந்து நீடூழி வாழ்வாயாக!'' என்று முதன் மந்திரி அநிருத்தர் ஆசீர்வதித்தார்.

"ஐயா! இந்தச் சமயத்தில் இத்தகைய ஆசீர்வாதத்தைத் தானா செய்வது?'' என்றாள் இளவரசி.

"ஏதோ இக் கிழவனுக்குத் தெரிந்த ஆசியைக் கூறினேன். வேறு எந்த ஆசியைக் கோருகிறாய், அம்மா!''

"என் அருமைத் தந்தையின் உடல் நிலையைப் பற்றி எல்லாரும் கவலைப் பட்டுக் கொண்டிருக்கிறோம். அருள்மொழி வர்மனைப் பற்றி நாடெல்லாம் கவலையில் ஆழ்ந்திருக்கிறது...''

"ஆனால் உன்னுடைய திருமுகத்தில் அதைப் பற்றிய கவலை எதையும் நான் காணவில்லையே, தாயே!''

"வீர மறக் குலத்தில் பிறந்தவள் நான். எல்லாரையும் போல் அபாயம் என்றதும் அழுது கொண்டிருக்கச் சொல்கிறீர்களா?...''

"ஒருநாளும் அவ்விதம் சொல்ல மாட்டேன். என்னைப் போன்ற வீரமற்ற ஜனங்களுக்கு இளவரசி ஆறுதல் கூறும்படி தான் சொல்கிறேன்.''

"ஆச்சரியமே! தங்களுக்கா நான் ஆறுதல் கூற வேண்டும்? உலகமே புரண்டாலும் நிலை கலங்காத வயிர நெஞ்சம் படைத்தவராயிற்றே தாங்கள்?''

"அப்படிப்பட்ட என்னையும் கலக்கி விடுகிறாய், அம்மா! அந்தப் புரத்துப் பெண்கள் ஆடல் பாடல்களில் ஆனந்தமாகக் காலங் கழித்து வர வேண்டும். அதைவிட்டு இராஜாங்க விஷயங்களில் நீ தலையிட்டதினால் எத்தகைய விபரீதம் நேர்ந்தது பார்த்தாயா!"

"ஐயோ! இது என்ன பழி? நான் எந்த இராஜாங்க விஷயத்தில் தலையிட்டேன்? என்னால் என்ன விபரீதம் நடந்து விட்டது?"

"இன்னும் சில காலத்துக்குப் பொன்னியின் செல்வன் இலங்கையிலேயே இருக்க வேண்டும் என்று நான் சொல்லி விட்டு வந்தேன். அதற்கு விரோதமாக நீ உடனே புறப்பட்டு வரும்படி உன் தம்பிக்கு ஓலை அனுப்பினாய். உன் விருப்பத்துக்கு மாறாக இந்தக் கிழவன் பேச்சை யார் மதிப்பார்கள்? அதனால் நேர்ந்துவிட்ட விபத்தைப் பார்த்தாயா? சோழ நாட்டு மக்களின் கண்ணுக்குக் கண்ணான இளவரசனைக் கடல் கொண்டு விட்டது. சற்று முன் இந்த அரண்மனை வாசலில் ஜனத்திரள் கூடி ஆர்ப்பாட்டம் செய்ததைப் பார்த்தாய். இம்மாதிரி நாடெங்கும் இன்று குழப்பம் நடந்து வருகிறது. இந்த அல்லோலகல்லோலத்துக்குக் காரணம் நீ அல்லவா, தாயே!"

"என்னுடைய ஓலையைப் பார்த்துவிட்டு அருள்மொழி வர்மன் இலங்கையிலிருந்து புறப்பட்டான் என்று ஏன் சொல்கிறீர்கள்? பழுவேட்டரையர்கள் இரண்டு கப்பல்கள் நிறைய வீரர்களை அனுப்பி இளவரசனைச் சிறைப் பிடித்துக்கொண்டு வரச் செய்தது உமக்குத் தெரியாதா?"

"தெரியும், அம்மா! தெரியும்! அத்துடனிருந்தால், இப்போது பொன்னியின் செல்வனுக்கு நேர்ந்து விட்ட கதிக்குப் பழுவேட்டரையர்களைப் பொறுப்பாளிகளாக்கலாம். அவர்கள் அனுப்பிய கப்பல்கள் இரண்டும் நாசமாகி விட்டன. உன்னுடைய ஓலைக்காகத் தான் இளவரசன் புறப்பட்டான் என்று அவர்கள் சொன்னால், யார் அதை மறுக்க முடியும்?"

"ஐயா? நான் ஓலை அனுப்பியது தங்களுக்கு எப்படித் தெரியும்? பழுவேட்டரையர்களுக்கு எப்படித் தெரியும்?"

"நல்ல கேள்வி கேட்டாய், அம்மா! எங்களுக்கு மட்டுந்தானா தெரியும்? உலகத்துக்கெல்லாம் தெரியும். நீ அனுப்பிய தூதன் இலங்கையில் முதலில் நம் வீரர்களால் சிறைப்படுத்தப் பட்டான். அதனால் இலங்கையில் உள்ளவர்களுக்கெல்லாம் தெரியும். அவனோடு கோடிக்கரை வரையில் சென்ற வைத்தியர் மகன் மூலமாக இந்த நாட்டில் உள்ளவர்களுக்கெல்லாம் தெரியும். நீ அந்தரங்கமாகச் செய்த காரியம் இவ்வளவு தூரம் அம்பலமாகியிருக்கிறது! ஆகையினாலேதான் ஸ்திரீகள் இராஜாங்க காரியங்களில் தலையிடக் கூடாது என்று நம் பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள்."

குந்தவை சிறிது நேரம் திகைத்துப் போய் நின்றாள். மறுமொழி என்ன சொல்வது என்று அவளுக்குத் தெரியவில்லை. முதன் மந்திரி நன்றாகத் தன்னை மடக்கி விட்டார். அவர் சொல்வதில் உண்மை இருக்கத்தான் இருக்கிறது. இந்த எண்ணம் தோன்றியதும் வாணர் குல வீரன்மீது அவளுக்குக் கோபம் எழுந்தது. வீர சாகஸச் செயல்கள் அவன் செய்யக் கூடியவன்தான். ஆனால் காரியத்தைப் பகிரங்கப் படுத்திக் கெடுத்து விட்டானே? அவனைப் பார்த்து நன்றாகக் கண்டிக்க வேண்டும். இவ்வாறு எண்ணியதும் முதன் மந்திரியின் கட்டளையின்படி அவன் சிறைப்படுத்தப் பட்டது நினைவு வந்தது. என்னவெல்லாம் தொந்தரவுக்கு ஆளாக்கிக் கொண்டு எனக்கும் தொந்தரவு அளிக்கிறான்? சற்று நேரம் சும்மா இருந்திருக்கக் கூடாதா? வைத்தியர் மகன் ஏதாவது உளறினால் அதற்காக அவன்பேரில் மேல் மாடத்திலிருந்து பாய்ந்து சண்டை துவக்கி யிருக்க வேண்டுமா?

"ஐயா! ஒரு கோரிக்கை செய்து கொள்கிறேன். பெரிய மனது செய்து நிறைவேற்றித் தர வேண்டும்."

"தேவி! கட்டளை இடு! இந்த இராஜ்யத்தில் உன்னுடைய வார்த்தைக்கு மறு வார்த்தை ஏது?"

"தாங்கள் அரண்மனை வாசலுக்கு வரும் சமயத்தில் இரண்டுபேர் சண்டை போட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்களைச் சிறைப்படுத்தத் தாங்கள் கட்டளையிட்டீர்கள்."

"அவர்கள் செய்தது பெருங் குற்றம். அரண்மனையில் மகாராணியின் கண் முன்னால் அவர்கள் சண்டை தொடங்கியது பெரும் பிசகு! அதுவும் எப்பேர்ப்பட்ட சமயத்தில்? பெரும் ஜனக் கூட்டம் கொதிப்புடனிருந்த நேரத்தில். காரணம் தெரியாத ஜனங்கள் தாங்களும் சண்டையில் கலந்து கொண்டிருந்தால் எத்தகைய விபத்து நேர்ந்திருக்கும்? சிறு நெருப்புப் பொறி பெருங் காட்டையே

அறிப்பதுபோல் நாடு நகர மெல்லாம் கலகமும் குழப்பமும் விளைந்திருக்குமே?''

''ஆம், ஐயா! அவர்கள் செய்தது பெரும் குற்றம்தான். ஆயினும் அவர்களில் ஒருவனை மன்னித்து விடுதலை செய்யும்படி தங்களை மன்றாடி வேண்டிக் கொள்கிறேன்.''

''இளவரசியின் அருளுக்குப் பாத்திரமான அந்தப் பாக்கியசாலி யார்?''

''நான் இலங்கைத் தீவுக்கு அனுப்பிய தூதன் அவன்தான்.''

''பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாயிற்று.''

''எதனால் அவ்வாறு சொல்கிறீர்கள்?''

''அந்தத் தூதனை நானே சிறைப்படுத்த வேண்டும் என்றிருந்தேன். இங்கே அவனாகவே எளிதில் அகப்பட்டுக் கொண்டான்.''

''எதற்காக? என்ன குற்றத்திற்காக?''

''தாயே! அவன்பேரில் பயங்கரமான குற்றம் சாட்டப் பட்டிருக்கிறது.''

''அது என்ன?''

''பொன்னியின் செல்வனை அவன்தான் கடலில் தள்ளி மூழ்க அடித்து விட்டான் என்று.''

''என்ன நாராசமான வார்த்தைகள்! யார் அப்படிக் குற்றம் சாட்டுவது?''

''பலரும் அவ்வாறு குற்றம் சாட்டுகிறார்கள். இளவரசரைக் கப்பலில் ஏற்றிக் கொண்டு வந்த பார்த்திபேந்திரன் சொல்கிறான். பழுவேட்டரையர்கள் 'இருக்கலாம்' என்கிறார்கள். நானும் சந்தேகிக்கிறேன்.''

''ஆச்சாரியரே! ஜாக்கிரதை! நான் ஒரு கொலைகாரனைப் பிடித்து அனுப்பி என் தம்பியைக் கொன்றுவிட்டு வரச் சொன்னதாகவா சந்தேகிக்கிறீர்!''

''ஒருநாளும் இல்லை, தாயே! அவனை உனது நம்பிக்கைக் குரிய தூதன் என்று நினைத்துக் கொண்டுதான் நீ அனுப்பினாய். அது தவறாயிருக்கலாம் அல்லவா? அவன் மாற்றார்களின் ஒற்றனாயிருக்கலாம் அல்லவா?''

''இல்லவே இல்லை. ஆதித்த கரிகாலன் அவனை என்னுடைய உதவிக்கு அனுப்பினான். அவனைப் பூரணமாக நம்பலாம் என்று எழுதி அனுப்பினான்......''

''ஆதித்த கரிகாலனும் ஏமாந்திருக்கலாம் அல்லவா, இளவரசி? வழியில் அவன் மாற்றப்பட்டும் இருக்கலாம் அல்லவா? நான் இங்கே வரும்போது 'ஒற்றன்' என்ற குற்றச்சாட்டு என் காதில் விழுந்தது. மேலே இருந்தவனைப் பார்த்துக் கீழே நின்றவன் குற்றம் சாட்டினான். அது என்ன, அம்மா?''

''மேலே நின்றவன்தான் என் தமையன் அனுப்பிய தூதன். வாணர் குலத்தில் வந்த வல்லவரையன் வந்தியத்தேவன். கீழே நின்றவன் வைத்தியர் மகன் பினாகபாணி. வந்தியத்தேவனைப் பழுவேட்டரையர்களின் ஒற்றன் என்று வைத்தியர் மகன் குற்றம் சாட்டினான். என்ன அறிவீனம்?''

''ஏன் இருக்கக் கூடாது, தாயே?''

''ஒருநாளும் இருக்க முடியாது. பழுவேட்டரையர் காவலிலிருந்து அவன் தப்பி வந்தவன். அவனைத் திரும்பக் கைப்பற்றப் பழுவேட்டரையர்கள் எத்தனையோ ஆட்களை அனுப்பிப் பிரம்மப் பிரயத்தனம் செய்தார்கள்......''

''அவனிடம் பழுவூர் முத்திரை மோதிரம் எவ்விதம் வந்தது, தாயே?''

''அந்த வஞ்சக அரக்கி, — மாய மோகினி,—விஷ நாகம், — தயவு செய்து மன்னித்துக் கொள்ளுங்கள், — பழுவூர் இளைய ராணி கொடுத்துத்தான் அவனுக்கு அம் மோதிரம் கிடைத்தது.''

''அது உனக்குத் தெரிந்திருப்பது பற்றிச் சந்தோஷப் படுகிறேன். நான் சொன்னால் நீ நம்பியிருக்க மாட்டாய். அந்த வல்லத்து வீரன் பழுவேட்டரையர்களின் ஒற்றன் அல்ல என்பது சரி. ஆனால் பழுவூர் ராணியின் ஒற்றனாயிருக்கலாம் அல்லவா?''

''அது எப்படி முடியும்?''

''எப்படி முடியும் என்று சொல்லுகிறேன். வந்தியத்தேவன், — நீ இலங்கைக்கு அனுப்பிய அந்தரங்கத் தூதன், —தஞ்சைக் கோட்டைக்கு வெளியில் பழுவூர் ராணியைப் பல்லக்கில் சந்தித்தான். அப்போது முத்திரை மோதிரத்தைப் பெற்றுக் கொண்டான். பிறகு, கோட்டைக்குள் பழுவூர் அரண்மனையின் அந்தப்புரத்தில் அவளைச் சந்தித்தான். அவனைப் பழுவூர் இளைய ராணி பொக்கிஷ நிலவறையில் ஒளித்து வைத்திருந்து வெளியே அனுப்பினாள். உன்னிடம் ஓலை கொண்டு வரப்போகிறான் என்று அவளுக்குத் தெரியும். இலங்கையிலிருந்து அவன் திரும்பி வரும்போது அரிச்சந்திர நதிக் கரையில் பாழடைந்த பாண்டியன் அரண்மனையில் நள்ளிரவில் அவர்கள் இருவரும் சந்தித்துப் பேசினார்கள். அதற்குப் பிறகும் பழுவூர் முத்திரை மோதிரம் வந்தியத்தேவனிடம் இருக்கிறது. இதையெல்லாம் பற்றி நீ என்ன நினைக்கிறாய், அம்மா! உன் தூதனிடம் இன்னமும் பரிபூரண நம்பிக்கை வைத்திருக்கிறாயா?''

குந்தவையின் உள்ளம் இப்போது உண்மையாகவே குழப்பத்தில் ஆழ்ந்தது.

# விளம்பரம்

சர்க்கார் கீழ்நாட்டுக் கலை
கையெழுத்துப் பிரதி நூல் நிலையம்
**(Govt. Oriental Manuscript Library)**
MADRAS - 5
திருவல்லிக்கேணி : சென்னை-5

இந்நூல் நிலைய அதிகாரி (Curator) அவர்கள் மேற்படி நூல் நிலையத்துக்குப் பலதிறப்பட்ட பாஷைகளிலுள்ள ஓலைச் சுவடிகள் போன்ற பழைய கையெழுத்துப் பிரதிகளைச் சேர்க்கவும், அவற்றைப் பாதுகாக்கவும் வேண்டிய முயற்சிகளை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஆனது பற்றி :—

(1) அத்தகைய பிரதிகளைத் தங்கள் வசமே வைத்திருப்பவர்கள், அவற்றை மேற்படி நூல் நிலையத்துக்கு வெகுமதியாகவோ, விலைக்கோ, நகல் எடுத்துக் கொள்ளவோ கொடுத்து உதவுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

(2) அல்லாத பொது ஜனங்கள், அவற்றை வைத்திருக்கும் நபர்களைப் பற்றிய தகவல்களை அறிவிக்கும்படி கோரப்படுகிறார்கள்.

(8) கையெழுத்துப் பிரதிகளைப் பெறுவதற்கு உதவி செய்பவர்கள் உசிதப்படி சன்மானிக்கப்படுவார்கள்.

(4) சகல விதமான கடிதப் போக்குவரத்துக்களும் மேற்படி நிலைய அதிகாரிகளுடனேயே செய்யப்பட வேண்டும்.




அன்புள்ள இந்திரா,

உனக்கு இத்தனை நாள் வரையில் மிகவும் அன்புடன் கடிதம் எழுதி வந்த நான் இந்தத் தடவை கொஞ்சம் கோபத்துடன் எழுத வேண்டி நேர்ந்தது பற்றி நானே மிகவும் வருந்துகிறேன். அதற்குக் காரணம் நீதான் என்பதை அறிந்தால் நீயும் வருந்துவாயே தவிர என்னிடம் கோபிக்க மாட்டாய்.

நீ ஊருக்குப் போய் ஆறு மாதங்கள் ஆகிவிட்டன என்பதை நான் உனக்கு நினைவூட்ட வேண்டியதில்லை என்று நினைக்கிறேன். அந்தக் கைங்கரியத்தை நான் உனக்கு அனுப்பிவைத்த காலண்டர் செய்துவிடும். ஆனால் நீ காலண்டரைக் கவனித்துப் பார்த்தால்தானே!

நீ உன் பிறந்தகத்தில் ஒரு மாதம் இருப்பதாகத்தானே என்னிடம் சொல்லிவிட்டுப் போனாய்? ஒரு மாதம் ஆனதும், 'என் அக்கா டில்லியிலிருந்து வந்திருக்கிறாள். அவளுடன் கொஞ்ச நாட்களாவது சேர்ந்து இருக்க வேண்டும் என்று அவள் ரொம்பப் பிரியப்படுகிறாள்' என்று எழுதினாய். நான் அதற்குச் சம்மதித்துப் பதில் எழுதினேன். அதற்குப் பிறகு ஒவ்வொரு மாதமும் ஒரு காரணம் காட்டி அங்கேயே இருக்கிறாய். ஆனால் ஒவ்வொரு காரணத்தையும் மிகவும் பொருத்தமாக அற்புதமான தமிழில் எழுதக் கற்றுக் கொண்டு விட்டாய். மாதா மாதம் எப்படித்தான் காரணம் கண்டுபிடித்து எழுதி வருகிறாயோ, எனக்குக் கொஞ்சங் கூட விளங்கவில்லை. வரவர உன்னுடைய சித்திர விசித்திரமான நீண்ட கடிதங்களைப் படிப்பதில் எனக்கு உண்டாகும் வெறுப்பையும் ஆத்திரத்தையும் இந்தக் கடிதத்தில் எழுத முடியவில்லை. படிக்காமலே கிழித்துப் போட்டுவிடலாமா என்று தோன்றுகிறது.

உன்னிடமிருந்து வரும் கடிதத்தைப் பிரிக்கும்போதெல்லாம் நீ புறப்பட்டு வருவதைப் பற்றி எழுதியிருப்பாய் என்ற ஆவலுடன் பிரிப்பேன். எல்லை ஏளனம் செய்வதுபோல், அதைப் பற்றி ஒரு வார்த்தைகூட இருக்காது. ஆனால் உன்னுடைய ஒவ்வொரு கடிதம் வரும்போதும் என்னுடைய ஆவல் தணியாது. மீண்டும் மீண்டும் ஏமாற்றம் அடைந்தும் என் மனசுக்குள் ஒரு நம்பிக்கைப் பொறி இருந்து கொண்டேயிருக்கிறது. ஏமாற்றம் காரணமாகக் கோபமும் மனசில் இல்லாமல் இல்லை.

இந்திரா, இன்னொரு விஷயம். நம் வீட்டுக்குப் பக்கத்து வீட்டில் ஒருவர் புதிதாகக் குடி வந்திருக்கிறார். முதலில் அவர் மட்டும்தான் வந்தார். இரண்டு வாரங்களுக்குப் பிறகுதான் அவர் மனைவி வந்தாள். அந்த இரண்டு வாரமும் அவர் தவித்த தவிப்பைச் சொல்லி முடியாது. நம் வீட்டில்தான் தங்கியிருந்தார். அவருக்கு நம் வீட்டில் சகல உபசாரங்களும் நடந்தன. ஆனால் அவர் முகம் மட்டும் ஏக்கத்துடன்தான் காணப்பட்டது. மனைவி வந்ததும் அவர் முகத்தில் ஏற்பட்ட பொலிவைப் பார்க்க வேண்டுமே!

"ஸார், கமலா வந்து விட்டாள், ஸார்! இனி மேல் எனக்கு ஒரு கவலையும் இல்லை. இப்பொழுதுதான் வீடு வீடாக இருக்கிறது!" என்று அவள் வந்ததும் எவ்வளவு உற்சாகத்துடன் சொன்னார் தெரியுமா?

எனக்கு அதற்கு மேல் தான் உன்னைப் பார்க்க வேண்டும் என்கிற ஆசை அதிகமாகத் தோன்றலாயிற்று.

இந்தக் கடிதம் கண்டதும் நீ புறப்பட்டு விடுவாய் என்று நம்புகிறேன். இந்தக் கடிதத்துக்கு அவசியம் இருந்தாலன்றி நீண்ட பதில் எழுத வேண்டாம்.

உன் அன்புள்ள,
வாசுதேவன்

* * *

அருமை......

தாங்கள் அன்புடன் எழுதிய கடிதம் கிடைத்தது. அதில் கொஞ்சம் இலேசாகக் கோபம் கலந்திருந்ததையும் கவனித்தேன். முதலில் என் மீது கொண்டுள்ள கோபத்தை, தயவு செய்து கொஞ்ச நேரத்துக்கு ஒத்திப்போடும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். கல்யாணத் தேதி, பரீக்ஷைத் தேதி, பிரபல சங்கீத விழாக்களின் தேதி இவற்றையெல்லாமே ஒத்திப் போடும்போது, தங்கள் கோபத்தைக் கொஞ்சம் ஒத்திப் போட்டதனால் ஒன்றும் குடிமுழுகிப் போய்விடாது என்பதைத் தாழ்மையாகத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இந்தக் கடிதத்தைப் படிக்காமலே கிழித்து விட மாட்டீர்கள் என்று நம்புகிறேன். ஆனால் படித்துவிட்டு அவசியம் கிழித்து விடும்படி கேட்டுக் கொள்கிறேன்.

உங்கள் கடிதத்துக்குக் கொஞ்சம் நீளமாகவே பதில் எழுத வேண்டிய அவசியம் இருப்பதனால் எழுதுகிறேன். மன்னித்து விட்டுக் கவனமாய்ப் படியுங்கள்.



என் கடிதத்தின் முன்னுரை முற்றிற்று. பின்னுரை ஆரம்பமாகிறது.

**நா**ன்கு வருஷங்களுக்கு முன்பு தாங்கள் என் கரம் பற்றினீர்கள். அதற்குப் பிறகு நாம் முதன் முதலில் சந்தித்தபோதே, பெண்களுக்குக் கல்வியறிவு இருக்க வேண்டிய அவசியத்தைப் பற்றி அடித்துப் பேசி ஒரு குட்டிப் பிரசங்கமே நிகழ்த்தி விட்டீர்கள். அப்புறம், அன்று நமது முதல் சந்திப்பு தினம் என்பதை நான் துணிந்து தங்களுக்கு நினைவூட்டித் தங்கள் பிரசங்கத்துக்கு நன்றி கூறி முடித்து வைத்தேன் என்பதைத் தாங்கள் அதற்குள் மறந்திருக்க மாட்டீர்கள் என்று நம்புகிறேன்.

பின்னர், என் படிப்பைப் பற்றித் தாங்கள் கேட்டபோது, நான் ஸ்கூல் பைனல் பரீக்ஷையில் தேறியிருக்கிறேன் என்று சொன்னேன். அதற்குத் தாங்கள் "வெறும் பள்ளிக்கூடப் படிப்பு மட்டும் போதாது. பல அறிஞர்களது நூல்களை நிறையப் படிக்க வேண்டும். நடமாடும் நூல் நிலையமாக விளங்க வேண்டும். நான் உனக்கு நிறையப் புத்தகம் வாங்கித் தருகிறேன். அவைகளைப் படித்து நல்ல ஞானம் பெற்ற பின் என்னிடம் வா, அது வரையில் உன் பிறந்த வீட்டிலேயே இரு!" என்று சொன்னீர்கள். (இந்த விஷயத்தை இவ்வளவு தெளிவாகச் சொல்ல வில்லை. ஆங்கில நூல்களிலிருந்தும் தமிழ் இலக்கியங்களிலிருந்தும் மேற்கோள்களை அள்ளியெடுத்து வீசி என் மூளையையே குழப்பி விட்டீர்கள்.)

பிறகு நான் உங்களிடம் கெஞ்சிக் கூத்தாடி நீங்கள் சொல்லுகிறபடி யெல்லாம் கேட்பதாகக் கூறி, உங்களுடனேயே இருப்பதற்கு ஒருவாறு அநுமதி பெற்றேன்.

அதிலிருந்து தாங்கள் நிறையப் பத்திரிகைகளும் புத்தகங்களுமாக வாங்கிக் குவித்தீர்கள். சங்கீதக் கச்சேரிகளுக்கும் நாடகங்களுக்கும் அழைத்துச் சென்றீர்கள். மனிதன் உயருவதற்கு மார்க்கம் கூறும் படங்களாகப் பார்த்து அழைத்துச் சென்றீர்கள். 'மனிதன் உயருவதற்கு இந்தச் சினிமாவில் என்ன இருக்கிறது?' என்று நினைத்து நான் மூளையைக் குழப்பிக் கொள்ளாமல் இருப்பதற்காகத்தானோ என்னவோ, நீங்களே அந்தப் படங்களின் தத்துவத்தைக் கொஞ்சமும் அலுப்படையாமல் விளக்கி வந்தீர்கள்.

பட்டணத்தில் நடக்கும் சொற்பொழிவுகளுக்கெல்லாம் என்னையும் அழைத்துச் சென்றீர்கள். அந்தச் சொற்பொழிவுகளை நான் ரஸிக்கிறேனா இல்லையா என்பதைப் பற்றி நீங்கள் சிறிதும் கவலைப்படவில்லை. சொற்பொழிவு நிகழ்ச்சி எதுவும் சுவாரஸ்யமா யில்லாத போது, நீங்களே எந்த விஷயத்தைப் பற்றியாவது நீண்ட சொற்பொழிவாற்றி என்னைத் தூங்கவிடாமல் அடித்தீர்கள்.

சென்ற வருஷம் நான் என் தம்பிக்கு உபநயனம் என்பதற்காகப் பிறந்தகம் வந்தேன் அல்லவா? அப்பொழுது ஊருக்கு வந்ததும் உங்களுக்குக் கடிதம் எழுத வேண்டும் என்று எனக்கு மிகவும் ஆசையாயிருந்தது. எழுதுவதற்கு ஆசைதான் உள்ளத்தில் பொங்கியதே தவிர என்ன எழுதுவது என்று தெரியவில்லை. மிகவும் சிரமப்பட்டு எனக்குத் தோன்றினவரையில் ஐந்தாறு வரிகள் எழுதித் தபாலில் சேர்த்துவிட்டு உங்களுடைய அன்பான பதிலை எதிர்பார்த்து ஆவலோடு காத்திருந்தேன். இரண்டு நாட்களில் உங்களிடமிருந்து பதில் வந்தது. ஆர்வத்தோடு கவரைப் பிரித்தேன். அம்மம்மா! ஒவ்வொரு வாசகமும் நெருப்பைக் கக்கியது.

அந்தக் கடிதத்தின் மூலம் நீங்கள் எடுத்த விசுவரூபம் இன்னும் என் மனக் கண்ணில் அப்படியே இருக்கிறது. அதில் கீழே காணும் வரிகளை உபதேசமாகச் சேர்த்திருந்தீர்கள்:

"கடிதம் எழுதுவது உயர்ந்த கலை. அதற்கு இணை அதுதான். சும்மா 'சௌக்யம் சௌக்யத்துக்கு எழுதவும்' என்று எழுதிக் கடிதத்தை நாலு வரிகளில் முடித்து விடுவது விஷயம் தெரியாதவர்கள் செய்கை. மூடத்தனம் என்றுகூடச் சொல்லுவேன். நாம் அப்படி எழுதக்கூடாது. ஒரு கடிதம் எழுதினால் அது நேரில் பார்த்துப் பேசுவதுபோல் இருக்கவேண்டும். கடிதம் எழுதும் கலையை வெறும் படிப்பினால் மட்டும் கற்றுக்கொண்டு விட முடியாது. எழுதி எழுதி அநுபவ வாயிலாகத்தான் உணர வேண்டும்!"

அந்த உபதேசப்படி கடிதம் எழுதும் கலையைக் கற்பதற்கு மிகவும் ஆவலாயிருந்தேன். உங்களுக்குக் கடிதம் எழுதவேண்டும் என்றால் நான் ஊருக்குப் போகவேண்டும். ஊருக்குப் போக வேண்டுமானால் அதற்கேற்ற சந்தர்ப்பம் கிடைக்க வேண்டும். அந்தச்

சந்தர்ப்பத்தை ஆவலோடு எதிர்நோக்கியிருந்தேன். கடைசியில் என் அம்மாவின் உடல்நிலை சரியாயில்லை என்று கடிதம் வரவே நான் ஊருக்குப் புறப்பட நேர்ந்தது.

அப்பொழுது நான் அடைந்த மகிழ்ச்சியை எப்படி உங்களுக்கு விளக்குவது என்றே தெரியவில்லை. உங்களுக்கு மிகவும் பிடித்தமான காரியத்தைச் செய்ய ஒரு சந்தர்ப்பம் கிடைத்ததே என்ற மகிழ்ச்சி என்னைத் தூங்கவும் விடவில்லை.

உங்கள் முகத்தை நிமிர்ந்து பார்த்துப் பேசுவதற்கே வெட்கப் பட்டுக் கொண்டிருந்த நான் எப்படிப் பக்கம் பக்கமாக உங்களுக்குக் கடிதம் எழுதினேன் என்பதை நினைக்க எனக்கே ஆச்சரியமாயிருக்கிறது.

என் கடிதங்களுக்கெல்லாம் நீங்கள் அற்புதமாகப் பதில் எழுதினீர்கள். ஒரு கடிதத்தில் தூய தமிழின் வேகத்தைக் கண்டால், இன்னொரு கடிதத்தில் இணையற்ற அன்பின் ஆழத்தைக் காண முடிந்தது; ஒரு கடிதத்தில் வன மயிலின் மனமோகன நடையைக் கண்டால், இன்னொரு கடிதத்தில் காதற்குயிலின் கீதத்தைக் கேட்க முடிந்தது; ஒரு கடிதத்தில் பேரன்பு பெரு வெள்ளமாகப் பெருக்கெடுத்தால், இன்னொரு கடிதத்தில் தூய அன்பு துல்லியமாகப் பிரகாசித்தது. சுருக்கமாகச் சொல்லப்போனால் தங்கள் கடிதங்களில் நான் என் மனத்தைப் பறிகொடுத்து விட்டேன். வானத்தையும் வையத்தையும் அவற்றில் காண்கிறேன்; மானஸிகமான என்றும் அழியாத இன்ப உலகத்தையே காண்கிறேன். புற உலக இன்பங்களையே மறந்து விட்டேன். அவ்வின்பங்களைப் புறக்கணிக்கவும் தயாராகி விட்டேன். அக் கடிதங்களை எத்தனை தடவை படித்தாலும் எனக்கு அலுப்பதில்லை. புதிது புதிதாகக் கருத்துக்களைக் காண முடிகிறது; நூதனமான எண்ணச் சுழல்களில் சுழல முடிகிறது.

தாங்கள் அனுப்பிய காலண்டரைப் பார்க்கவில்லை என்று குறை கூறுகிறீர்கள். தங்களுடைய நீண்ட கடிதங்களைப் படித்து ரஸிப்பதற்கே நேரம் போதாமல் இருக்கும் எனக்குக் காலண்டரைப் பார்க்க அவகாசம் ஏது?

நான் இங்கே தாமதிக்க நேர்ந்ததற்குக் காரணம் தாங்கள்தான். அதாவது தங்களுடைய ருசிகரமான கடிதங்கள்தான் என்பதை நான் வெளிப்படையாக எழுதவேண்டியதில்லையென்று நினைக்கிறேன்.

தங்களுடைய கடிதங்களைப் படித்தால், அத்தகைய இணையற்ற கடிதங்களைப் பெறுவதற்காக, பீஜித் தீவிலே கூட இருக்கலாம் என்று தோன்றுகிறது.

இந்திரா

அன்புள்ள இந்திரா,

உன் கடிதம் கிடைத்தது. இன்று புறப்பட்டு நான் நாளைக்கு அங்கே வருகிறேன். உடனே என்னுடன் புறப்படத் தயார் செய்து கொள் — பீஜித் தீவுக்கு அல்ல; சென்னைக்குத்தான்.

வாசுதேவன்




## 323. மங்களம்.

இந்திரஜித்தின் மரணம் காரணமாக ராவணனுக்குச் சோக வெறி பிறந்ததையும் அந்த வெறியில் சீதையைக் கொல்லப் போனதையும் மகோதரன் தடுத்து விலக்கியதையும் பார்த்தோம்.

சோக வெறி தணிந்தது; ராவணனுக்கு வீர வெறி பிறந்து விட்டது. "இதோ அந்த மனிதர்களை ஹதம் பண்ணி விடுகிறேன்!" என்று எழுந்தான். வீராதி வீரர்களையும் என்றுமே தோல்வியே அறியாத சேனைகளையும் சேர்த்துக் கொண்டு போர்க்களம் சென்றான்.

அங்கே தயாராய்த்தான் இருந்தான் ராமன்.

ராவணன் தன்னுடைய அரிய பயிற்சி சாதனங்களை எல்லாம் காட்டினான். வீராவேசம் ஒன்று வந்து எவ்வளவோ துணை செய்தது அவனுக்கு.

ஆனாலும் ராமபாணங்கள் செய்த தொழில் பிரமிக்கச் செய்து விட்டது ராவணனை. அவற்றின் சதுரப்பாடுகளை அனுபவித்துக் கொண்டே தன்னுடைய பாணங்களை ராமன் மேல் பிரயோகித்தான்.

கடைசியில் ராமனுடைய அர்த்த சந்திர பாணம் வந்தது. அறுபட்டது ராவணேசுவரனது தலை. தரையிலும் விழுந்தது அது. ராமனது வீரமும் தர்மமும் வெற்றி பெற்றன. சீதையும் மீட்கப் பட்டாள்.

அரக்கர்களுக்குச் செய்ய வேண்டிய ஈமக் கடன்களை எல்லாம் விபீஷணன் செய்து முடித்தான்.

விபீஷணன் என்ன, சுக்கிரீவன் என்ன, அனுமன் என்ன, வானர வீரர்கள் என்ன எல்லாருமே இலங்கையை விட்டு அயோத்திக்குப் புறப்படுகிறார்கள். லக்ஷ்மணனது ஆனந்தத்தையும் சீதா தேவியின் ஆனந்தத்தையும் வார்த்தைகளால் சொல்லத்தான் முடியுமா? இனி நாம் அயோத்திக்குப் போகிறோம்.

அயோத்தி இப்போது என்ன நிலையில் இருக்கிறது?

பதினாலு வருஷமாக பரதன் ராமனை எதிர்பார்த்துக் கொண்டுதான் இருக்கிறான். தினம் தினம் தெற்குத் திசையை, "வரமாட்டானா ராமன், இன்று வர மாட்டானா" என்ற ஏக்கத்தோடு பார்க்கிறான். வர வில்லை.

நாட்கள் கழிகின்றன. மாசங்கள் கழிகின்றன. வருஷங்கள் ஒன்று, இரண்டு, மூன்று என்று கழிகின்றன. பதினாலு வருஷங்களும் கழிந்து விட்டன.

ராமன் வருவதாகக் குறிப்பிட்டிருந்த நாளும் விடிந்து விட்டது. கோபுரத்தில் ஏறினான் பரதன். தெற்குத் திசையை நோக்கினான். ராமன் வருகிறதான சின்னமே இல்லை.

"இனி யோசனைக்கு இடமில்லை. சரி, சரி. பரதனே ஆண்டு கொண்டு இருக்

கட்டும். அந்த ஆட்சியைக் கலைப்பானேன் என்று எண்ணி எங்கேயோ போய் விட்டான் ராமன். அவ்வளவு தான். என்னுடைய பிரதிக்ஞையை நிறைவேற்ற வேண்டிய கடமை என்னுடையது" என்று முடிவு செய்து பெரிய அக்கினி குண்டம் ஒன்றை வளர்க்கச் சொன்னான்.

தாய்மார்கள், பிரமுகர்கள், முனிவர்கள் எல்லாரையும் கூப்பிட்டு விட்டான். "பிரதிக்ஞைப்படி இன்று அக்கினிப் பிரவேசம் செய்யப் போகிறேன். இனிமேல் ஒரு விநாடி இந்த உயிரை வைத்துச் சகித்துக் கொண்டிருக்க முடியாது" என்று சொல்லி விட்டான்.

பலரும் வாதாடிப் பார்த்தார்கள். வாதாடுவது பிரயோசனம் இல்லை என்று தெரிந்து அப்படி அப்படியே நின்று விட்டார்கள்.

அந்தச் சமயம்தான் அங்கு வந்து சேர்ந்தான் தம்பி சத்துருக்கனன். சத்துருக்கனனிடம் பரதன் சொல்லுகிறான். "உனக்குத் தெரியும் சித்திரகூட பருவதத்தில் வைத்து ராமன் சொன்னது: 'பதினாலு வருஷத்தில் திரும்பி வந்து விடுகிறேன்' என்று சொன்னான். வராது போனால் அக்கினிப் பிரவேசம் செய்து விடுவேன் என்று நான் சொன்னதும் உனக்குத் தெரியும். இன்றுதான் அவன் வர வேண்டிய நாள்—வரவில்லை.

"அக்கினிப் பிரவேசம் செய்யப் போகிறேன்; நீ ஒரு காரியம் செய்ய வேண்டும்.



தம்பி:— அண்ணா, இப்பொழுதெல்லாம் நான் சிக்கனமாயிருக்கிறேன். உனக்குத் தெரியுமா?

அண்ணா:—இத்தனை நாளாக அது தெரியாது. இப்பொழுதுதான் என் சட்டைப் பையிலே போடுகிற சில்லறை காணாமற் போவதற்குக் காரணம் தெரிந்தது!

கொஞ்ச காலம் கழித்து வருவான் ராமன். அது வரையும் நாட்டை நீ ஆள வேண்டும். பிறகு ராமன் கையில் சேர்த்துவிட வேண்டும்."

இந்த வார்த்தைகளை ஒரு விதமாகக் கேட்டுக் கொண்டிருந்தான் சத்துருக்கனன். சிறிது நேரம் மௌனமாக நின்றான். பிறகு பேச்சு வந்தது. எப்படி வருகிறது பாருங்கள்!

தம்பி என்ற பதத்துக்கு இலக்கணம் சொல்லுகிறான்.

கானாள நிலமகளைக்
கைவிட்டுப் போனவனைக்
காத்துப்பின் பு
போனானும் ஒருதம்பி,
போனவர்கள் வரும்அவதி
போயிற்றென் று
ஆனாத உயிர்விடஎன்(று)
அமைவானும் ஒருதம்பி,—
அயலேநா னா(து)
யானும்இவ் அரசாள்வென்!
என்னே இவ் அரசாட்சி!
இனிதேஅம் மா!

[கானாள நிலமகளைக் கைவிட்டுப் போனவனை: ஜேஷ்ட புத்திரனாகப் பிறந்தவன் ராமன். அவன் ராஜ்யத்தை ஆள வேண்டும். அந்த ராஜ்யத்தைப் பரிதவிக்க விட்டு விட்டுக் காட்டையல்லவா ஆளப் போயிருக்கிறான். அப்படிப் போனவனை; காத்துப் பின்பு போனானும் ஒரு தம்பி: காப்பதற்காகப் பின் தொடர்ந்து போன லக்ஷ்மணனும் ஒரு தம்பி;

போனவர்கள் வரும் அவதி போயிற்றென்று: அப்படிப் போன ராம லக்ஷ்மணர்கள் திரும்ப வேண்டிய நாள் முடிந்து விட்டதென்று: ஆனாத உயிர்விட என்று அமைவானும் ஒரு தம்பி: உடலை விட்டுப் போகமாட்டேன் என்று சாதித்துக் கொண்டிருந்த உயிரை இன்று விட்டுவிடலாம் என்று அக்கினியோடு நிற்கிற நீயும் ஒரு தம்பி; அயலே நானாது யானும் இவ் அரசாள்வென்: மூன்றாவது தம்பியாகிய நான் லஜ்ஜையில்லாமல் நாட்டை ஆளுகிறது எப்பேர்ப்பட்ட காரியம்; என்னே இவ் அரசாட்சி இனிதே அம்மா: இது ஒரு அரசாட்சியா. சுகமான அரசாட்சிதான், என்னத்தைச் சொல்ல!—என்பதாக மனம் கசந்து, இதயம் துடித்துப் பேசுகிறான் சத்துருக்கனன்.]

சுற்றி இருந்த மக்கள் என்ன செய்வார்கள்?—சகிக்க முடியாத துக்கத்திலும் வேதனையிலும் மூழ்கிக் கிடக்கிறார்கள்.

அந்த வேளையில் "வந்து விட்டான் ராமன், ராமன் வந்து விட்டான்" என்ற சப்தம் கேட்டது.

அநுமன் ஓடி வந்தான். அக்கினி குண்டத்தை அப்படியே கையினால் தேய்த்து அழித்தான். "ராமன் வந்து விட்டான், வந்து விட்டான்" என்று கை கொட்டிக் கூத்தாடினான்.

ராமன் வருகிற விஷயத்தைப் பிறகு எடுத்துச் சொன்னான்.

பரதன் மனதில் ஒரே ஆனந்தப் பெருக்கு. வெறியே உண்டாய் விட்டது. ராமனைக் கண்கொண்டு பார்க்க அல்லவா போகிறோம் என்ற ஆனந்த வெறி பரதனை என்ன பாடெல்லாமோ படுத்துகிறது.

வேதியர் தமைத்தொழும்,
  வேந்த ரைத்தொழும்,
தாதியர் தமைத்தொழும்,
  தன்னை யேதொழும்!
ஏதும்ஒன் (று) அறிகிலான்
  இருக்கும் நிற்குமால்!
காதல்என் றதுமோர்
  கள்ளின் தோற்றிற்றே!

[வேதியர் தமைத் தொழும்: வேதியர்கள் நின்ற இடத்துக்குப் போய்த் தரையில் விழுந்து தொழுதான்— "நீங்கள் பிரார்த்தனை செய்தீர்கள், ராமன் வந்துவிட்டான், உங்களுக்கு என் நன்றி" என்று கூறி வேதியரைத் தொழுவது இயல்புதான்.

வேந்தரைத் தொழும்: தனக்குக் கீழான சிற்றரசர்களையே தொழுதான் — இது கொஞ்சம் கோளாறுதான்: பிறகு:

தாதியர் தமைத் தொழும்: வேலை செய்யும் பெண்கள் இடத்துக்குப் போய்க் காலில் விழுந்து தன் நன்றியைக் கூறினான். இது பைத்தியம்தான்.

கடைசியாக, தன்னையே தொழும்: ஒரு ஆளுக்கு எதிரே போய் 'ஏ பரதா! ராமன் வர வேண்டுமென்று நீ பிரார்த்தித்தாய். ராமன் வந்து விட்டான்! உனக்கும் என் நன்றி'—என்று அவனைப் பார்த்தே பேசுகிறான். இது பைத்தியமே தான். கள்ளைக் குடித்தவன் காரியம்தான்.

ஏதும் ஒன்று அறிகிலான்: ஒன்றும் அவனுக்குச் சரியானபடி புலப்படவில்லை. தானுமாருகவே தோன்றுகிறது—ஆனந்த வெறியில்.

இருக்கும் நிற்குமால்: தரையில் உட்கார்ந்து பத்து நிமிஷம் அப்படியே இருக்கிறான். பிறகு எழுந்து நிற்கிறான். ஒரு வார்த்தையும் பேசாமல் நெடுநேரம் நிற்கிறான். இதை யெல்லாம் பார்க்கிறார் கம்பர். என்ன சொல்லுகிறார்:

காதல் என்று அதுமோர் கள்ளின் தோற்றிற்றே: சகோதர வாஞ்சை என்கிற இந்தச் செயல் எல்லாம் கள்ளின் வெறியாகத் தான் நிற்கிறது!]

பரதனது உள்ளத்திலுள்ள ஆனந்த நிலையை அற்புதமாகச் சித்திரிக்கிறது பாடல்.

* * *

அடுத்த நிமிஷமே ராமன், லக்ஷ்மணன், சீதை மூவரும் வந்து விட்டார்கள். விபீஷணன் முதலானவர்கள் மற்றுமுள்ள வானர வீரர்கள் எல்லாரும் வந்து விட்டார்கள். ஆனந்த வெள்ளம் எங்கே பார்த்தாலும் பெருக்கெடுத்து ஓடுகிறது. ஜனங்கள் அதில் திளைக்கிறார்கள்.

வாத்திய கோஷங்களுக்கு இடையே நடக்கிறது ராம பட்டாபிஷேகம். மங்களம். மங்களம். மங்களம்.



ஹைதராபாத் சார்டர்ட் அகௌண்டென்ட் ஸ்ரீ A. S. A. நடராஜய்யர் குமாரத்தி சௌபாக்கியவதி ஜயலக்ஷ்மிக்கும், புனா, E. A. சுப்பிரமணிய அய்யர் குமாரர் சார்டர்ட் அகௌண்டென்ட் ஸ்ரீ E. S. வெங்கட்ராமன் B. Sc., L. L. B., A. C. A.,க்கும் ஹைதராபாத்தில் சென்ற ஏப்ரல் 28-ல் வெகு விமரிசையாக விவாகம் நடைபெற்றது. முகூர்த்தத்திற்கும், மறுதினம் நடந்த விருந்திற்கும் பிரமுகர்கள் பலரும் வந்திருந்தனர். இந்தியக் குடியரசு ஜனாதிபதி, மந்திரிகள், மற்றும் பல பிரமுகர்களிடமிருந்தும் மணமக்களுக்கு வாழ்த்துச் செய்திகளும் பாராட்டுச் செய்திகளும் ஏராளமாய் வந்து குவிந்தன.

# பர்மா-ஷெல் ரிபைனரி வேலை தொடங்குகிறது

பர்மா-ஷெல் ரிபைனரி வேலை ஆரம்பமாகிவிட்டது. ஆனால் கட்டடங்கள் கட்டப்படுகின்றன என்றோ அல்லது அஸ்திவாரம் போடப்படுகிறது என்றோ இதற்கு அர்த்தமல்ல. நிலத்திலிருந்து ஒரு மண்வாரி சேற்றைக்கூட எடுத்து அப்புறப்படுத்துவதற்கு முன் வெகுவான பூர்வாங்கயோசனையும் நடைமுறை வேலையும் செய்தாக வேண்டும்.

**இப்போது கட்டடம் கட்டும் ஸ்தலம் விமானத்திலிருந்து பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது.**

முதலாவதாக விமான மூலமாக ஸர்வே செய்வதற்காக ஸ்தலத்தை ஒழுங்கு படுத்தும் வேலை நடைபெறுகிறது. அதாவது முக்கியமான அடையாளச் சின்னங்களை எங்கெங்கே அமைப்பது என்று வரையறுத்து அமைக்கப்படுகிறது. இந்த அடையாளச் சின்னங்களை வைத்துக்கொண்டு, விமானத்திலிருந்து எடுக்கும் போட்டோக்களிலிருந்து விஸ்தாரமாக ஒரு படம் வரையப்படும். எனவே அதற்கான அடையாளக்குறிகள் அமைக்கப்படுகின்றன. கடல் மட்டத்துக்கு மேல் எவ்வளவு உயரம் இருக்கிறது என்கிற தகவல் பல இடங்களில் குறிக்கப்படுகிறது.

இதன் பிறகு விமானத்திலிருந்து எடுக்கப்படும் போட்டோவை வைத்துக்கொண்டு விஸ்தாரமான படம் ஒன்று வரைகிறார்கள். இந்தப் படத்திலிருந்து 'புளூபிரின்ட்'டுகள் எடுத்து அவற்றை 'பிளேன் டேபிள்' (PLANE TABLE) என்ற ஸர்வே கருவியின் மீது பொருத்துகிறார்கள். முன் கூறியபடி புளூபிரின்டிலுள்ள விவரங்கள் சரியாக இருக்கின்றனவா என்று பிளேன் டேபிள் மூலமாக ஒத்திட்டுப் பார்க்க வேண்டும். தந்திக்கம்பிகள், மைல் கற்கள், பாலங்கள் முதலியன விமான போட்டோக்களில் தெரிவதில்லை. எனவே அப்பொருட்களையும் பிளேன் டேபிள் மூலமாகக் கண்டறிய வேண்டும். இதனுடன் கூட கிலோ மீட்டர்கள் மூலமாகக் கட்டிட அமைப்பின் சுற்றுக் கோடுகள் வரையப்படுகின்றன. ஸர்வேயர்கள் ஒரு சுற்றுக் கோட்டில் வேலை செய்து கொண்டே அடுத்தாற்போலவும் அடியிலும் அடுத்தசுற்றுக் கோட்டை வரைகின்றனர். படம் பூர்த்தியான பிறகு இந்தச் சுற்றுக் கோடுகள் வளைந்து வளைந்து செல்வதைக் காணலாம். இந்தச் சுற்றுகோடுகளிலிருந்து தரை மட்டத்தை ஒழுங்கு படுத்துவதும், தரையைத் தோண்டுவதும் ஆகிய வேலைகளுக்குத் திட்டம் செய்யப்படும். பாறைகள் நிறைந்த மலைப்பிரதேசத்தை ஒரு நவீன ரிபைனரியாக மாற்றுவதற்கு முன் இக்காரியம் எல்லாம் செய்தாக வேண்டும்.

இந்த வேலையுடன் கூட காமிரா மூலமாக எல்லா விவரங்களையும் காண்பது போலக் காட்டுவதற்காக அநேக விமான போட்டோக்களை ஒன்று சேர்த்துப் பொருத்தி, படமாக ஆக்கி, அப்படத்திலிருந்து ஸ்தலம் முழுவதையும் நன்றாகப் பார்க்கக்கூடியதாகச் செய்ய வேண்டும். இப்படத்திலே ஸர்வேயர்கள் மேற்கொண்டு வேலை செய்யும் அளவுகோல் விகிதத்தையே கையாளப்பட வேண்டும்.

கடைசியாக, படம் இரண்டு வர்ணங்களில் அச்சிடப்படுகிறது. விவரங்கள் கறுப்பு நிறத்திலும் சுற்றுக் கோடுகள் பழுப்பு நிறத்திலும் காணப்படுகின்றன. இந்த வேலை முழுவதும் ஒரு ஸர்வே குழுவினரால் மேற்கொள்ளப்படுகின்றன. இந்தக் குழு இந்திய கவர்ன்மெண்ட் ஸர்வே டிபார்ட்மெண்ட் தெற்குவட்டாரத்திலிருந்து அமைக்கப்பட்டது. விமான போட்டோக்களும் அவர்கள் எடுத்தவை.



**கடைசி செய்தி:**— பர்மா-ஷெல் ரிபைனரியின் அளவு 2,000,000 டன்களாகும்; முன் அறிவித்தபடி 1,500,000 டன்கள் அல்ல. இந்த மாறுதல் செய்யப்பட்டும் கூட 1956 வருஷ ஆரம்பத்தில் ரிபைனரி உற்பத்தி வேலை தொடங்குவதற்கான திட்டத்தில் எவ்வித மாறுதலும் இல்லை.






அன்று வானரபுரி அனுமார் கோயிலில் ஒரே கும்பல். காரணம் குரங்க நாயகியின் நாட்டிய அரங்கேற்றம் அன்று ஏற்பாடாகி யிருந்ததுதான். கலாரஸிகர் சுந்தரவாலி தலைமை வகித்தார். கச்சேரி ஆரம்பமாயிற்று. நடனசுந்தரி நாயகியின் அபிநயம் எல்லோரையும் பிரமிக்க வைத்தது. அவள் நாட்டியத்தை எல்லோரும் தான் அனுபவித்தார்கள். ஆனால் அனங்கபாலன் அதை அனுபவித்ததே வேறுமாதிரிதான்; ஏன் என்றால் அவனுக்கு நாயகிமேல் அளவு கடந்த ஆசை!

அரங்கேற்றம் நடந்த சில தினங்களுக்கெல்லாம் வானரபுரியிலிருந்து ஒரு சைன்னியம் புறப்பட்டது. அது வேறு ஒன்றுமில்லை: நாயகியின் நடனகோஷ்டிதான். இளம்பியவர்கள் சிதம்பரம், தஞ்சாவூர், மதுரை, திருவனந்தபுரம் முதலிய இடங்களுக்கெல்லாம் போனார்கள். அவர்களுக்குச் சென்ற இடமெல்லாம் அமோக வரவேற்பு. அங்குள்ளவர்கள் அவளுக்குத் தேங்காய் மூடிகளாகக் கொடுத்தார்கள். வாழைப் பழங்கள், மாம்பழங்கள், பலாப் பழங்கள் இவைகளுக்கும் குறை வில்லை. அவள் நாட்டியத்தைப் பார்த்தவர்கள் "இவள் ஒரு அதிசயப் பிறவி!" என்று புகழ்ந்தார்கள். "வானர சமூகத்தில் ஜொலிக்கும் நக்ஷத்திரம்" என்றார்கள். "நாட்டிய ராணி" என்ற பட்டம் பெற்றாள் நாயகி. இந்தக் கண்டறியாத புதுமையைப் பார்த்தவர்கள் நாயகியின் நாட்டியக் கச்சேரியைச் சென்னையிலும் ஏற்பாடு செய்தார்கள். நாயகியின் நாட்டியம் அமர்க்களமாக நடந்தது.



இலங்கையிலிருந்து ஒரு சங்கீத சபையின் காரியதரிசி வந்திருந்தார். நாயகியின் நாட்டியத்தைப் பார்த்ததும் குதிக்க ஆரம்பித்து விட்டார். நாயகியை இலங்கை வாசிகளுக்கு அறிமுகப் படுத்தும் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். ஊருக்குப் போய்த் தந்திகொடுப்பதாகவும் வானரபுரிக்குக் கோஷ்டியைத் திரும்பிப் போக வேண்டாம் என்று சொல்லி விட்டுப் போனார். ஆனால் "விபீஷணா ஏர்வேஸ்" விமானத்தில் இடம் இல்லாததால் பிரயாணம் தடைப்பட்டது. இருந்தாலும் அவர்களது உற்சாகம் குறைந்துவிட வில்லை.

ஒரு நாள் வானரர்கள் எல்லோரும் உறங்கிக் கொண்டிருந்தார்கள். அனங்கபாலனுக்கு என்னமோ தூக்கமே வரவில்லை. திடீரென்று மனிதர்கள் நடமாட்டம் அங்கு அதிகமாயிற்று. அனங்கபாலன் எல்லோரையும் "கீச் கீச்" என்று கத்தி எழுப்பிவிட்டான். சிலர் ஓடி விட்டார்கள். ஆனால் பலர் அகப்பட்டுக் கொண்டார்கள். தான் வெற்றி அடைந்ததாக எண்ணி அவன் கைகொட்டிச் சிரித்தான். குட்டிக்கரணங்கள் போட்டான். தலைகீழாக நின்றான். ஆனால் அவன் சந்தோஷம் நிலைக்கவில்லை. அவன் கண்ணெதிரில் நடந்தது ஒரு சம்பவம். அவன் அருமைநாயகி நாட்டிய ராணியை ஒருவன் சிறைப்படுத்தி விட்டான். இதைப் பார்த்த அனங்கனுக்கு உயிரே போய்விடும் போலிருந்தது. ஒருவன் என்ன செய்ய முடியும்? "நாயகி! கவலைப்படாதே. உன்னை மீட்டே தீருவேன். நம் நண்பர்களையும் விடுவிப்பேன்!" என்று உறுதி கூறி விட்டு நாயகியைப் பிடித்தவன் மேல் ஒரு கண் வைத்துக் கொண்டான். மற்றவர்களைப் பற்றி அவன் கொஞ்சமும் கவலைப்படவில்லை.

நாயகியைப் பிடித்தவன் அவளை ஒரு சோலைக்குள் இழுத்துக் கொண்டு போனான். ஒரு கயிற்றை எடுத்து நாயகியின் இடுப்பில் கட்டினான். ஒரு கழியைக் கையில் எடுத்துக் கொண்டு வந்தான். "ராமனே! ராமனே!" என்று பாடிக் கொண்டே அவளை அங்கும் இங்கும் இழுத்து, குதிக்கச் சொன்னான்; கையில் ஒரு கொட்டாங்கச்சியைக் கொடுத்துத் தலையில் வைத்துக் கொள்ளும்படி செய்தான். இதை யெல்லாம் பார்த்த அனங்கனுக்கு அவளை

அப்படியே கொலை செய்து விட வேண்டும் போலிருந்தது!

உடனே, மடமட வென்று தென்னை மரம் ஒன்றில் இரகசியமாக ஏறினான் அனங்கன். நல்ல தேறின மட்டைத் தேங்காயைப் பிடுங்கிக் கொண்டான். மேலே இருந்து அந்த மனிதன் தலையில் "தடார்" என்று போட்டான். அவ்வளவு தான். "ஐயோ" என்று அந்த ஆசாமி சுருண்டு விழுந்தான். கீழே இறங்கினான் அனங்கன். தூக்கிக் கொண்டான் நாயகியை. மரத்துக்கு மரம் தாவினான். வீட்டிற்கு வீடு குதித்தான். மறுபடியும் மயிலாப்பூர் கோபுரத்தை அடைந்தான்.



கோபுரத்தை அடைந்த அனங்கனை வரவேற்றவர்கள் நாயகியின் நட்டுவனாரும், பின் பாட்டுக்காரர்களும் தான். அவர்கள் கூடி யோசனை செய்தார்கள். இலங்கைக் கச்சேரியைச் செய்து விடவேண்டும் என்ற முடிவுக்கு வந்தார்கள். அதையால் நடன கோஷ்டியார் மீனம்பாக்கம் போய்த் தங்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கும் இரவு விமானத்தில் ஏறிக் கொண்டார்கள். அப்பொழுது அனங்கன் ஒரு காட்சியைக் கண்டான். ஒரு பெரிய கூட்டில் அவனுடைய சுற்றத்தார்களை அடைத்திருந்தார்கள். ஒரு ஆசாமி அந்தக் கூட்டிற்குப் புதிதாக ஒரு பூட்டு போட்டுப் பூட்டினான். சாவியுடன் சென்ற ஆசாமியை இரகசியமாகத் தொடர்ந்தான் அனங்கன். அந்த ஆள் ஓர் அறைக்குள்போய்ச் சாவியைச் சுவரிலே மாட்டி விட்டுக் கதவைத் தாளிட்டுக் கொண்டான். சிறிது நேரம் சென்றதும் அவன் குறட்டை விடும் சப்தம் கேட்டது. அனங்கன் அந்த அறையைச் சுற்றி வரும் போது ஒரு ஜன்னல் தெரிந்தது. அதில் ஏறினான். உள்ளே பார்த்தால் சுவரில் சாவி இருந்தது. அந்தச் சாவியை லாகவமாக எடுத்துக் கொண்டு வந்து கூட்டை அவசர அவசரமாகத் திறந்து விட்டான். அவனுடைய உற்றார்களும் இலங்கைக்குப் போகும் விமானத்தில் ஏறிக் கொண்டார்கள். விமானமும் இலங்கையை நோக்கிப் பறந்தது. "அனங்கா! காலை விமானத்தில் எங்களை அமெரிக்கா அனுப்புவதாக இருந்தார்கள். நல்ல சமயத்தில் காப்பாற்றினாய். நீ சிரஞ்சீவியாக இருக்கவேண்டும்!" என்று வாழ்த்தினார்கள்.

மறுபடியும் நாயகியின் நடன கோஷ்டியில் சந்தோஷம் நிலவியது. தடை ஏதுமின்றி இலங்கைக்குச் சென்றார்கள். இலங்கையில் பிரமாதமாக நடனம் நடந்தது. பிறகு விமானம் வானரபுரிக்குத் திரும்பியது.

சுற்றுப் பிரயாணம் செய்து வெற்றியுடன் திரும்பிய நாயகியின் மனத்தில் மட்டும் ஒரு சந்தோஷத்தையும் காணோம். எப்பொழுது பார்த்தாலும் "உர்" என்று முகத்தை வைத்துக் கொண்டிருந்தாள்.

"அம்மா! போதும் இந்த நாட்டியம். எனக்குப் பெயரும் புகழும் வந்து விட்டது. இத்துடன் கௌரவமாக நாட்டியத்திலிருந்து விலகிக் கொள்ளத் தீர்மானித்து விட்டேன்" என்று உறுமினாள். இதைக்கேட்ட அவள் தாயாருக்கு ஆச்சரியமாய்ப் போய் விட்டது. "சரி! நாயகி! அப்படியானால் நான் ஒரு ஏற்பாடு செய்து விடுகிறேன்" என்றாள். "என்ன ஏற்பாடு?" என்று கேட்டாள் நாயகி. "நாயகி! நான் உனக்கும் அனங்கனுக்கும் கலியாணம் நிச்சயம் செய்து விட்டேன்" என்றாள். "போ அம்மா" என்று கத்திக்கொண்டே ஓடினாள் நாயகி.

மறுபடியும் அனுமார் கோயிலில் ஒரே கூட்டம். இன்று கூடிய கூட்டம் நாயகி-அனங்கன் திருமணத்திற்காகத்தான். விவாகம் இனிது நடந்தேறியது.

"ஹிந்து" பத்திரிகையின் பிரதிநிதி ஸ்ரீ V. V. சாஸ்திரி அவர்களின் குமாரத்தி சௌபாக்கியவதி காமாக்ஷிக்கும் திருவள்ளூர் P. W. D. கண்டிராக்டர் ஸ்ரீ M. K. மஹாதேவ அய்யர் அவர்களது குமாரர் சிரஞ்சீவி M. V. ராஜனுக்கும் சென்ற ஏப்ரல் மாதம் 20-ம் தேதி யன்று சென்னையில் விவாகம் மிகவும் சிறப்பாக நடந்தேறியது.

வாழ்க காமாக்ஷி - ராஜன்!



**வெண்மையாக**
சலவை செய்யப்
பட்டுள்ளன

**பிரகாசமாக**
சலவை செய்யப்
பட்டுள்ளன

# சன்லைட் சோப்பில்
தான்




துணிகளை அடித்துத்துவைக்காமலே வெண்மையாகவும் பிரகாசமாகவும் சலவை செய்கிறது!

S. 180-50 TM




"வர, வர, இந்தப் பஞ்சு, சொல்லுகிற பேச்சைக் கேட்பதே இல்லை. சுத்த அசடாகி வருகிறான்" என்றாள் கூடத்து மாமி.

இது என்ன கூத்து? 'கூடத்து மாமி' என்று யாருக்காவது பெயரிருக்குமா என்று நீங்கள் யோசிக்கலாம். விஷயம் இவ்வளவுதான். ஒரு பெரிய வீட்டில் நாலைந்து குடித்தனக்காரர்கள் இருந்தால், அந்தக் குடித்தனக்காரர்களை அவர்கள் வசிக்கும் இடத்தை வைத்து அழைப்பது வழக்கம். இரேழி அறையில் வசிப்பவர்களை இரேழி மாமா, இரேழி மாமி என்றும், முன் கட்டில் வசிப்பவர்களை முன் கட்டு மாமா, முன் கட்டு மாமி என்றும், மாடியில் இருப்பவர்களை மாடி மாமா, மாடி மாமி என்றும் அழைப்பது வழக்கம். அப்படித்தான் இந்தக் கூடத்து மாமா — கூடத்து மாமி என்ற பெயர் வந்ததும்.

கூடத்து மாமா, தன் பிள்ளை பஞ்சுவைப் பற்றி இந்தக் குறையைத் தெரிவித்ததும், "பஞ்சு, யார் பேச்சைக் கேட்கிறதில்லை என்கிறாய்?" என்றார் மாமா.

"என் பேச்சைத்தான்—வேறு யார் பேச்சைக் கேட்கவில்லையே என்று நான் கவலைப்படப் போகிறேன்" என்றாள் மாமி.

"உன் பேச்சைக் கேட்காததினாலே அவன் அசடாகி விட்டான் என்கிறாயாக்கும்."

"ஆமாம்."

"எனக்கென்னமோ அப்படித் தோணவில்லை..." என்றார் கூடத்து மாமா.

"பின்னே எப்படித் தோணறது?"

"உன் பேச்சைக் கேட்காததினாலே அவன் புத்திசாலியாகி விட்டான் என்றே தோன்றுகிறது!" என்றார் கூடத்து மாமா.

இதிலிருந்து பிடித்தது வாக்கு வாதம்—தர்ம யுத்தம்—தாம்பத்ய சண்டை.

*

அவர்கள் சண்டை எப்படியாவது போகட்டும். கூடத்து மாமா சொன்னதிலும் ஒரு உண்மையிருக்கிறது என்பதுதான் என் விஷயம்.

நம் நாட்டில் எத்தனையோ பெரியோர்கள் இருக்கிறார்கள். அவர்கள் வாழ்க்கையெல்லாம் சற்று ஆராய்ந்து பார்த்தால், அவர்கள் 'தங்கள் பெற்றோர்களின் பேச்சைக் கேளாதவர்களாகவே இருந்திருக்கிறார்கள் என்பது தெரியவரும். ஏன், அந்தப் பெற்றோர்களின் பேச்சைக் கேட்டிருந்தார்களானால், அவர்கள் இன்றைக்கு அடைந்துள்ள பெயரும் புகழும் அடைந்தே இருக்க மாட்டார்கள்.

"பள்ளிக்கூடம் போய்ப் படி" என்று தம் பிள்ளைக்குச் சட்டை போட்டு, சம்பளம் கட்டி, சாதத்தை மூட்டை கட்டிக் கொடுத்து அனுப்பினால், அந்தப் பிள்ளை நாலாவது மைலிலிருக்கும் ஒரு ஊரில், யார் வீட்டுக் கல்யாணத்துக்கோ பிரபல நாதஸ்வர வித்வான் வந்திருக்கிறார் என்று போய்த் தொலைந்திருக்கும். இப்படிப் போன பிள்ளைதான் பின்னால் பெரிய சங்கீத வித்வானாகி மகா ஜனங்களின் பெருமதிப்புக்குப் பாத்திரமாகி யிருப்பான்!

இப்படித்தான் ஒவ்வொரு துறையிலும். இதை அதிகமாக விவரிக்க வேண்டியதில்லை.

ஆனால் இந்தச் சந்தர்ப்பத்தில் ஒரு ஹிந்தி கவிஞரின் கூற்று ஞாபகத்துக்கு வருகிறது. அவர் ராம பிரானையும் பரதனையும் ஒப்பிட்டுப் பின்வருமாறு கூறினார்:—

"ராமன், தன் தந்தையின் சொற்படி கேட்டுப் பதினான்கு வருஷம் வன வாசம் செய்யப் புறப்பட்டுப் போனான். தன் தந்தையின் சொல்லைக் கேட்டதனால் பெயரும்புகழும் பெற்றான். ஆனால் பரதனோ தன் தாயின் சொல்லைக் 'கேட்க மாட்டேன்' என்று ராஜ்யத்தை விட்டுக் காட்டை நோக்கிப் புறப்பட்டான். இப்படித் தாயின் வார்த்தையைக் கேளாததனால், ராமனை விடக் கீர்த்தி வானானான்!"

இந்தச் சந்தர்ப்பத்தில் நமது கவிச் சக்கரவர்த்தி கம்பர் குகன் வாயிலாகப் பரதனைப் பற்றிக் கூறுவதும் ஞாபகப் படுத்திக் கொண்டால் நல்லது.

நாயுரை கொண்டு நாதை
    உதவிய தரணி தன்னைத்
தீவினை என்ன நீத்துச்
    சிந்தனை முகத்தில் தேக்கிப்
போயினை என்ற போழ்து
    புகழினோய் தன்மை கண்டால்
ஆயிரம் இராமர் நின்கேழ்
    ஆவரோ தெரியின் அம்மா!

ஆயிரம் ராமர்கள் கூடப் பரதனுக்குச் சமமாவார்களா என்பது சந்தேகம்தான் என்று குகன் கூறியதாகக் கம்பர் கூறிவிட்டார்.

அடிப்படைக் காரணம் தாயின் வார்த்தையைக் கேளாமை என்று ஏற்படுகிறது.

அதனால் இந்தக் கட்டுரையின் நீதி தாயின் வார்த்தையைக் கேளாதே என்று சொல்வதாகக் கருதக் கூடாது! தாயின் வார்த்தையைத் தட்டி பரதன் போல் தியாகமும் இன்னலும் ஏற்கத் தகுந்தவர்களாக ஆவது நம்மைப் போன்ற சாதாரண மனிதர்களுக்கு மிக மிகச் சிரமம்!

ஆகவே, பரதனாக ஆக நம்மால் இயலாவிடினும் ராமச்சந்திர மூர்த்திகளாகவாவது இருக்க முயல வேண்டும் என்பது தான் நோக்கம்.

ஆனால் எங்கள் வீட்டுக் கூடத்து மாமி மட்டும் ஒரு விஷயத்தை மிகுந்த ஆவலுடன் எதிர் நோக்கிக் கொண்டிருக்கிறாள். எப்போது பஞ்சு, அவன் அப்பா வார்த்தையைக் கேட்காமலிருக்கப் போகிறான் என்ற சந்தர்ப்பத்தைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறாள்.

அப்படி வந்ததும், "உங்கள் வார்த்தையைக் கேட்காததினாலேயே அவன் புத்திசாலியாகிவிட்டான்" என்று 'பளிச்' சென்று பதில் சொல்லக் காத்திருக்கிறாள்!

# படித்துப் பாருங்கள்!

## சிவகாமியின் சபதம்

**ப**ழந் தமிழ் நாட்டில் புகழ் பெற்று விளங்கிய பல்லவ குல மன்னர்களின் சரித்திரத்தைப் பல வருஷ காலம் "கல்கி" ஆசிரியர் ஆராய்ச்சி செய்தார். பல்லவ சரித்திரம் சம்பந்தமாக வெளியாகியுள்ள எல்லா நூல்களையும் படித்தார். மாமல்லபுரம், காஞ்சிபுரம் முதலிய சரித்திர ஆதாரங்கள் உள்ள இடங்களுக்குப் பல முறை சென்று அங்குள்ள சிற்பக் கலை அற்புதங்களைப் பார்த்து விட்டு வந்தார். இந்தப் பல வருஷ காலத்தில் "சிவகாமியின் சபதம்" "பார்த்திபன் கனவு" என்னும் கதைகள் "கல்கி" ஆசிரியரின் மனத்தில் உருவாயின. இக் கதைகளை எழுதுவதற்குப் பல வருஷங்கள் பிடித்தன. அவை "கல்கி" பத்திரிகையில் வருஷக்கணக்கில் தொடர்ந்து வெளியாகி வந்ததை நேயர்கள் அறிவார்கள்.

ஆசிரியர் மேற் கொண்ட இவ்வளவு முயற்சிகளுக்கும் உரிய பரிசு சென்ற 1951-ம் வருஷத்தின் இறுதியில் கிடைத்தது. "சிவகாமியின் சபதம்" இரண்டாவது பதிப்புக்குப் பேராசிரியர் கே. வி. ரங்கசாமி ஐயங்கார் அவர்கள் எழுதி அளித்திருக்கும் 23 பக்கம் கொண்ட விரிவான முன்னுரையே அந்தப் பரிசு ஆகும். திருவனந்தபுரம் கலாசாலையிலும் காசி சர்வ கலாசாலையிலும் நீண்ட காலம் தலைமைப் பேராசிரியர் பதவி வகித்துப் புகழ் பெற்றவர் ஸ்ரீ கே. வி. ரங்கசாமி ஐயங்கார். சரித்திரம், பொருளாதாரம், நீதி சாஸ்திரம் ஆகியவற்றில் நிகரில்லாத புலமை வாய்ந்த நிபுணர். அத்தகையவர் "சிவகாமியின் சபதம்" என்னும் நூலுக்கு முன்னுரை அளிக்க உவந்தது அந்த நூலுக்குப் பெருஞ் சிறப்பாகும். சரித்திரக் கதை எப்படி அமைய வேண்டும் என்பது பற்றிய அற்புத ஆராய்ச்சிக் கட்டுரையாக அவருடைய முன்னுரை அமைந்திருக்கிறது. ஒரு தனி நூலாகவே வெளியிடத் தகுந்த அந்த விரிவான முன்னுரையிலிருந்து சில வரிகளை மட்டும் கீழே தருகிறோம்:

During a long life I had read hundreds of historical novels and had come to form some idea of the qualities that should be present in the best works of the class. 'PARTHIVAN-KANAVU' seemed to me to possess most of these. It was the first attempt to my knowledge, to utilise the ancient history of a famous South Indian dynasty and region as the background of an attractive story. * * *

"Kalki's SIVAKAMIYIN SAPATHAM will be acclaimed even on a superficial study, as a brilliant historical romance. His stylistic qualities, to which so discriminating a critic as Sri Vaiyapuri Pillai bore testimony in the foreword prefixed to the first edition of the preceding book will win this book also the appreciation of those who value literary form. So judged, a permanent place will be accorded to it in Tamil prose literature...But one has to know even the *minutiae* of the history of South India and Dakhan at the period in which the action described is placed, to be able to appreciate fully and correctly the scholarly qualities of the author, as revealed in this book, and the wide and exact knowledge of the sources of the history of the times. A minute examination of the book has not shown a single error in history or geography. Every work in print bearing on the period seems to have been studied closely when composing the book. * * *"

பேரறிவாளரான பெரியவர் ஒருவரிடமிருந்து இத்தகைய பாராட்டுதலைப் பெறுவதைக் காட்டிலும் ஒரு நூலாசிரியர் பெறக்கூடிய பரிசு ஒன்றுமில்லை. தமிழ்ப் பெரு மக்களும் இந்த நூலை நல்லபடியாக மதித்திருக்கிறார்கள் என்பது ஆசிரியரின் மகிழ்ச்சியை அதிகப்படுத்துகிறது.

ஆயிரத்து ஐம்பதுக்கு மேற்பட்ட பக்கங்களையும் அநேக வர்ண சித்திரங்களையும் நூற்றுக்கணக்கான சித்திரங்களையும் கொண்ட இந்த நூலுக்கு விலை பதினைந்து ரூபாய் மிக மலிவு என்பதைப் புத்தகப் பதிப்புத் தொழிலில் ஈடுபட்டவர்கள் அனைவரும் அறிவார்கள். எனினும், பதினைந்து ரூபாய் கொடுத்து ஒரு தமிழ்ப் புத்தகம் வாங்குவது என்பது எளிதான காரியமா! படிப்பதில் சுவையுள்ள நடுத்தர வகுப்பாருக்குப் பதினைந்து ரூபாய் எவ்வளவு பெரிய தொகை! அப்படியிருந்தும், இந்த நூலின் முதற் பதிப்புப் பிரதிகள் அவ்வளவும் விற்பனையாகி இரண்டாம் பதிப்பும் வெளியாகியிருப்பது தமிழ்ப் பெரு மக்களின் பண்பாட்டுக்கும் புத்தகப் பற்றுக்கும் அறிகுறி என்று கூறுவது மிகையாகாது.

இரண்டாம் பதிப்பை மிக நல்ல முறையில் பரிசுப் பதிப்பாகவே வெளியிட்டிருக்கும் கமர்ஷியல் அச்சகத்தாருக்கு நமது நன்றி உரியதாகும்.

*விலாசம்:* கமர்ஷியல் பிரிண்டிங் அண்டு பப்ளிஷிங் ஹவுஸ், 45-46, அரண்மனைக்காரன் தெரு, ஜி. டி., சென்னை. உயரிய பரிசுப் பதிப்பு: விலை ரூ. 15—0—0.

# அருவிக்கரை ஆசிரமம்

ஆசிரியர்: சுதர்சன்

மொழிபெயர்ப்பு: ரா. வீ.

## 2. இன்ப முகம்

சகோதரா! நான் இப்பொழுது சொல்லப் போகும் விஷயம் உனக்குப் பிடிக்காமல் இருக்கலாம். என்மீது உனக்கு வெறுப்பை ஊட்டலாம். நான் உண்மையை ஒளிக்காமல் சொல்லுகிறேன் என்பதற்காகவாவது என்னை மன்னித்துவிடு. நான் இந்தியன் என்பது தெரிந்தபொழுது எனக்கு ஏற்பட்ட மனவேதனையைச் சொல்லி முடியாது. ஏனெனில் நான் இந்தியர்களைக் கீழானவர்களாகக் கருதி வந்தேன். இந்தியாவைப் பொறுத்த வரை என் அபிப்பிராயங்கள் மிக மிக மட்டரகமாக இருந்தன. இந்தியாவை ஒரு தேசமாக எண்ணக்கூட என் மனம் மறுத்தது. ஆகவே, நான் இந்தியன் என்று தெரிந்த பொழுது, நான் என் பார்வையிலேயே வீழ்ந்தவனாகி விட்டேன். இந்தியத் தாய் தந்தையருக்குப் பிள்ளையாகப் பிறந்த நாம் மிக மிகத் துர்ப்பாக்கியசாலியாகத்தான் இருக்க வேண்டும் என்று எண்ணி மிகவும் மனம் புழுங்கினேன். தங்கம் என் கண்களுக்குப் பித்தளையாகத் தோற்றமளித்ததுதான் இதற்குக் காரணம். நான் என் ஜாதியை யாருக்கும் தெரியப்படுத்தியதில்லை. வெள்ளையுடையில் கறை பட்டு விட்டால் மூடி மூடி மறைத்து வைத்துக் கொள்ளுவது போல் நான் என் ஜாதியைப் பொறுத்த ரகசியத்தை மூடி மூடி மறைத்து வைத்துக் கொள்ளலானேன். அந்த நாட்களை இப்பொழுது நினைத்துப் பார்த்தால் கூட உள்ளமும் உடலும் நடுங்குகின்றன; மயிர்க் கூச்செறிகின்றன. தலை வெட்கத்தினால் தொங்கிவிடுகிறது. ஆனால் அந்தக் காலத்தில் என் நிலை இந்த மாதிரி இல்லை. நாம் இந்தியன் என்ற எண்ணம் எழும்பொழுதெல்லாம் எனக்கு இருதயமே வெடித்து விடும்போலிருந்தது. அவலட்சணத்திலும் அவலட்சணமான மனிதனுக் கெதிரே கண்ணாடியைக் காட்டினால், அவன் வெட்கித் தலைகுனியத்தானே செய்வான்? அதுபோல நான் வெட்கிக் கூனிக் குறுகிப் போவேன். இதெல்லாம் எதற்குச் சொல்லுகிறேன், தெரியுமா? அந்தக் காலத்தில் எனக்கு இந்தியன் என்றால் அவ்வளவு வெறுப்பு. ஆகவே, நான் என் பெயரை ஹாரிஸன் கூப்பர் என்றே சொல்லி வந்தேன். கையெழுத்துப் போட நேரும்பொழுது கூட எச். கூப்பர் என்றுதான் போடுவேன். நான் இந்தியன் என்னும் விஷயம் என் நண்பர்களில் யாருக்குமே தெரியாது. நானும் என்னை இந்தியன் என்று வெளியிட்டுக் கொண்டதில்லை; வெளியிட்டுக் கொள்ள விரும்பியதும் இல்லை.

அந்தக் காலத்தில் எல்லாம் எனக்கு இந்தியர்கள் மனிதர்களாகவே தோன்றியதில்லை. குற்றம் புரிந்து தூக்கு நிரப்பும் ஆசாமிகளையும் இந்தியர்களையும் ஒன்றாகவே நான் நிறை போட்டு வைத்திருந்தேன். எப்பொழுதாவது




இந்தியக் கனவான் எங்கள் கடைக்கு வந்து விட்டால், நான் அவரை உற்று உற்றுக் கவனிப்பேன். இவருக்கும் நமக்கும் எந்தெந்த விஷயங்களில் ஒற்றுமை-வேற்றுமை இருக்கின்றன என்பதை ஆராய முற்பட்டு விடுவேன். அப்பொழுது என்நிறம், நடை, உடை பாவனை, கண்கள், பேச்சு எல்லாமே வெவ்வேறு விதமாக இருப்பதாகத் தோற்றமளிக்கும். அப்புறம்தான் மனம் எனக்குச் சற்று நிம்மதி அடையும். வழக்கில் வெற்றி கண்டவன் நிம்மதியாக நீண்ட மூச்சு விட்டு 'அப்பாடா!' என்று தன் சிரமத்தைத் தீர்த்துக் கொள்ளுவானே, அது போல நான் நிம்மதியான நீண்ட மூச்சு விட்டு மனத்தில் உள்ள சுமையை ஒருவாறு குறைத்துக் கொள்ள முயல்வேன்.

ஆனால் என்றைக்காவது ஒரு நாள் நம் ஜாதி விஷயம் ஜனங்களிடம் வெளிப்பட்டு விட்டால் என்ன ஆகும் என்ற எண்ணம் வேதாளம் முருங்கை மரம் ஏறிய கதையாகத் திரும்பத் திரும்ப உள்ளத்திலே இடம்பெறும். உடனே என் இருதயத்தைப் பெரும் சுமை அழுத்தத் தொடங்கி விடும். அப்புறம் என் தலைவிதியை எண்ணி என்னை நானே நொந்து கொள்ளுவேன். எதற்காக இந்தியனாகப் பிறந்தோம் என்ற எண்ணம் என் உள்ளத்தை வாட்டிப் பிழியத் தொடங்கி விடும்.

கடைசியில் ஒரு நாள் நான் பயந்த விதமே ஆகி விட்டது. என் ஜாதியைப் பற்றிய ரகசியம் ஒரு நாள் என் கல்லூரித் தோழர்களிடையே வெளிப்பட்டு விட்டது.

அன்று ஒருநாள் சாயந்திரம் நான் நண்பன் ஒருவன் வீட்டுக்குத் தேநீர் அருந்துவதற்காகப் போயிருந்தேன். என் நண்பன் என்னைப் பார்த்ததும், "ஹலோ! இன்று எனக்கு ஒரு புதிய விஷயம் தெரிய வந்தது!" என்றான்.

அவன் அதைச் சொன்னதுமே எனக்குக் கொஞ்சம் சந்தேகம் தட்டியது. நான் பதற்றத்துடன், "என்ன விஷயம்?" என்றேன்.

"ஆனால் அதில் எனக்கு இன்னும் நம்பிக்கை உண்டாகவில்லை!" என்றான் அவன்.

அவன் விஷயத்தைச் சொல்லாமல் பூர்வ பீடிகை போட்டுக் கொண்டே போனது என் மனத்துக்கு இன்னும் பரபரப்பை அளித்தது. "விஷயம் என்ன? சொல்லேன்!" என்றேன் துடிப்புடன்.

"கோபித்துக் கொள்ள மாட்டாயே?"

"மாட்டேன்!" என்று ஒப்புக்குச் சொன்னேனே ஒழிய என் உள்ளத்துள்ளே தீ பற்றி எரிந்து கொண்டிருந்தது.

"உனக்குக் [illegible]னைத் தெரியும் அல்லவா?" என்று அவன் தயங்கியவாறே கேட்டான்.

"அவனைத் தெரியாமல் என்ன? நன்றாகத் தெரியுமே!" என்றேன் நான்.

"நீ இந்தியன் என்று அவன் இன்று கல்லூரியில் சொல்லிக் கொண்டிருந்தான். ஏன் ஹாரிஸன்! இதென்ன, அவன் சொல்வது உண்மைதானா?" என்று கேட்டான்.




அச்சொற்களைக் கேட்டதுதான் தாமதம்; என் கண்களில் தீப்பொறி பறக்கத் தொடங்கி விட்டது. என்னை எனக்கெதிரிலேயே நேருக்கு நேர் யாரோ அவமானப்படுத்தி விட்டது போன்ற உணர்ச்சி எழுந்து உள்ளத்திலே தீப்பிழம்பைக் கக்கத் தொடங்கி விட்டது. அச்சமயத்தில் என் கையில் துப்பாக்கியும் இருந்து, கிராஸம் என் கண்களில் பட்டிருந்தானானால், அவனை அங்கேயே தீர்த்துக் கட்டி விட்டுத்தான் மறு காரியம் பார்த்திருப்பேன். என் ஜாதியை மறைக்க நான் என்னவெல்லாம் பாடுபட்டேன்! என் ஜாதியின் ரகசியத்தை மூடி மூடி எவ்வளவு ஜாக்கிரதையாக மறைத்து வந்தேன்! கடையில் ஒரு நொடியில் என் பிரயத்தனங்கள் அவ்வளவும் வீணாகி இப்படி ரகசியம் வெளிப்பட்டு விட்டதே! நான் இவ்வளவு நாளும் மூடி மூடி மறைத்து வந்த என் ஜாதி ரகசியம் எல்லோருக்கும் தெரிந்த, வெட்ட வெளிச்சமான, பகிரங்க ரகசியமாகவா ஆகவேண்டும்? இந்தப் பாவத்துக்கு நான் என்ன செய்வது?

ஆனால் நான் எப்படியோ சிரமப் பட்டுத் துணிவை வரவழைத்துக் கொண்டு, "அந்தப் பயல் பொய் சொல்கிறான். அதற்கு ஏற்ற தண்டனையை ஒரு நாள் இல்லா விட்டால் ஒரு நாள் அவன் அநுபவித்தே தீர வேண்டும்!" என்று கறுவியவாறே கூறினேன்.

ஏதோ மேலுக்கு இப்படிச் சொல்லி விட்டேனே ஒழிய மனத்துக்குச் சிறிதும் அமைதி கிட்டவில்லை. மறு நாள் கல்லூரி செல்லும் நேரம் வந்ததும் என்னை வெட்கம் பிடுங்கித் தின்றது. 'நாம் இந்தியனாகப் பிறந்து எவ்வளவு பெரிய தவறு இழைத்துவிட்டோம்?' என்பதை நினைத்த மாத்திரத்தில் என் உள்ளம் புழுங்கியது; உடல் குன்றியது; தலை வெட்கத்தினால் கவிழ்ந்தது. அவ்வளவுதான். அதற்குப் பிறகு கல்லூரிக்குப் போக வேண்டும் என்ற எண்ணமே என்னை விட்டு அகன்று விட்டது. நான் அத்துடன் படிப்புக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டுக் கடை வேலைகளைக் கவனிக்கலானேன். அதற்கு அடுத்த வருஷமே என் தகப்பனார் காலமாகிவிட்டார்.

இப்பொழுது என் கடைக்கு நான்தான் எஜமானன். நல்லதோ, கெட்டதோ, கஷ்டமோ நிஷ்டூரமோ, லாபமோ நஷ்டமோ எல்லாம் என் கையில்தான் இருந்தது. நான் என்ன செய்தாலும் என்னை ஏன் என்று கேட்க ஆள் யாரும் இல்லை. நான் வைத்தது தான் சட்டம் என்று ஏற்பட்டுவிடவே, என் இஷ்டப்படி யெல்லாம் ஆட்டம் போடலானேன். அதிகாரம் கைக்கு வந்துவிட்டால் யாருமே ஆட்டம் போடுவது இயல்புதானே?

சோதரா! நான் என் மனம் போன போக்குப்படி யெல்லாம் இந்த உலகத்தின்

இன்பங்களை அநுபவித்தேன். கவிகள் இந்த உலகத்தின் எழிலை எத்தனையோ விதமாக வர்ணித்திருக்கிறார்கள். கவிகளின் வர்ணனையைப் போலவே, என் கண்களுக்கும் இந்த உலகம் எழில் மிக்க ஒரு சோலையாகக் காட்சி அளித்தது. சோலை என்றால் பூத்துக் குலுங்கும் பலவித விருக்ஷங்களும் பழங்களைத் தாங்கிப் பணிவாக நிற்கும் பலவகை மரங்களும் இருக்க வேண்டும் அல்லவா? பணம், பேரழகு, பருவம் இம் மூன்றும் உலகம் என்னும் சோலையின் மிக மிக இனிமையான பழங்களாக எனக்குத் தோற்றமளித்தன. அம் மூன்றும் என்னிடத்தில் ஏராளமாக வேண்டிய அளவு இருந்தன. ஆகவே, அவற்றைக்கொண்டு நான் நினைத்த இன்பங்களை நினைத்தபொழுது நினைத்த விதமெல்லாம் அநுபவித்து வந்தேன்.

நானே என்னைப் பற்றிப் பிரமாதமாகப் புகழ்ந்து கொள்வதாக நினைத்து விடாதே. நான் சாதாரணமான ஆங்கிலேயர்களைக் காட்டிலும் எத்தனையோ மடங்கு அழகுள்ளவனாக இருந்தேன் என்பதை என்னால் இங்கு சொல்லிக் கொள்ளாமல் இருக்க முடியவில்லை. ஏன், ஜனங்கள்கூட அப்படித்தான் எண்ணி வந்தார்கள். என் நிறத்தில் ஒன்றும் அவ்வளவு விசேஷம் இல்லை. ஆங்கிலேயர்களின் நிறமே வெள்ளையானது. எத்தனையோ ஆங்கிலேயர்கள் என்னைவிட வெள்ளை நிறத் தோல் படைத்தவர்களாக இருக்கத்தான் இருப்பார்கள். ஆனால் என்னிடத்தில் இருந்த இந்தியத் தோற்றமும் அதன் அழகும் ஆங்கிலேயர்களிடம் ஏது? அது மட்டுமா? அவர்கள் பெண்களைப் பற்றிக் கொண்டிருக்கும் அபிப்பிராயத்தை என்னவென்று சொல்வது? அவர்கள் பெண்களைப் பெண்களாக மதித்தால்தானே? தங்களுக்கு இன்பம் தரும் கைப் பொம்மையாகத்தான் கருதுகிறார்கள். அவர்களுடைய வெறியாட்டத்துக்கு எத்தனை பெண்கள் இலக்காகி இருப்பார்களோ, தெரியாது. ஆனால் நான் பெண்களை உடல் இன்பம் தரும் பாவைகளாகக் கருதவில்லை. அவர்களுடைய உள்ளத்துக்கு மதிப்புக் கொடுத்து அவர்களுடன் விளையாடினேன்; சிரித்துப் பேசி மகிழ்வெய்தினேன். ஆனால் நாகரிகத்தின் மரியாதைக்கு மீறி எதுவும் செய்யவில்லை.

கடைசியில் **ஸ்டெலா** என்னும் பெண் ஒருத்தி தன் அழகின் முழுபலத்தையும் பிரயோகித்து என் உள்ளத்தை ஆக்கிரமித்துக் கொண்டாள். அவளைச் சாதாரணப் பெண் என்று சொல்லுவது தவறு. அவள் அழகில் அப்ஸரஸை நிகர்த்திருந்தாள்! அழகில் ரம்பை, ஊர்வசி என்று இந்தியக் கதைகளில் வர்ணிக்கிறார்களே, அந்த அழகிகள்கூட அவளிடம் அழகுக்குப் பிச்சை வாங்க வேண்டும். அவள் அழகு மனத்தை மயக்கும் திறன் உடையதாக இருந்தது. அவள் சாதாரண ஆங்கிலேயப் பெண்களைப் போல் மட்டரகமானவளாக எனக்குத் தோன்றவில்லை. பேச்சுக்குப் பேச்சு பல்லைக் காட்டி 'கல கல' வென்று சிரித்ததில்லை. அவள் தன் உதடுகளில் புன்னகையை வருவித்து இலேசாகத் தன் முத்துப் போன்ற பல் வரிசைகளைக் காட்டுவதே தனி அழகாக இருக்கும். அவள் அழகிலே நான் என் உள்ளத்தைப் பறி கொடுத்து விட்டேன். அவளைக் கண்டாலே என் மனம் இறங்கத் தொடங்கியது.

ஸ்டெலா அடிக்கடி என் கடைக்கு வந்து போய்க் கொண்டிருந்தாள். அவள் கடைக்கு வந்து விட்டால் எல்லோருக்கும் முன்னால் நான் அவளைத்தான் கவனிப்பேன். நான் அவளை எவ்வளவுக் கெவ்வளவு முடியுமோ, அவ்வளவுக்கவ்வளவு அதிக நேரம் கடையில் தங்கவைக்க வேண்டும் என்பதற்காக இல்லாத முயற்சிகள் எல்லாம் எடுப்பேன். அறியாப் பாலகன் அழகிய பொம்மையிலே மனத்தைப் பறிகொடுத்து மதி இறங்கி நிற்பானே, அதுபோல நான் அவள் அழகில் மயங்கிக் கண் கொட்டாமல் அவளையே பார்த்தவாறு நிற்பேன். இப்படியாக எங்கள் காதல் கதையின் முதல் அத்தியாயமான அறிமுகப் படலம் ஆரம்பமாகியது. ஆரம்பமான அந்த அத்தியாயம் 'விடு விடு' என்று முன்னேறி எங்கள் இருவரையும் பாசக் கயிற்றில் பிணைத்து விட்டு முடிந்த சுவடே தெரியாமல் முடிந்து விட்டது. அதற்குப் பிறகு நாங்கள் இன்னும் வெகு சுதந்திரத்துடன் ஒருவரையொருவர் சந்தித்துப் பேசலானோம். அவள் ஒரு நாள் வராமல் இருந்து விட்டால் என்



"இந்தக் கோடை வீவிலே கையை விட்டுக் காலணா செலவு கூட இருக்காது. நினைத்த வேளைக்கு இஷ்டப்படி சாப்பாடு; இஷ்டப்படி தூக்கம்; சொன்னதைச் செய்ய மனிதர்கள்! இத்தனைக்கும் நான் ஒன்றும் செய்யவில்லை!"

"அப்படி யெல்லாம் உனக்கு உபசாரம் செய்யக் கூடியவர்கள் எந்த ஊரில் இருக்கிறார்களோ?"

"ஊரா? நான் இந்த லீவுக்கு வேறு ஊருக்குப் போகும் உத்தேசம் இல்லை. உன் ஊரில் என் வீட்டிலேயே தங்கி விடப் போகிறேன்.




# பாதி விலை

சமீபத்தில் ஸ்விட்ஜர்லாந்திலிருந்து ஏராளமான கடிகார சரக்குகளை வரவழைத்து அவைகளை பாதி விலைக்கு குறைவாக வழங்குகிறோம் என்பதை மிகவும் மகிழ்ச்சியுடன் தெரிவிக்கிறோம். ஒவ்வொரு கடிகாரமும் 3 வருஷ உத்திரவாதம் கொண்டவை. ஒவ்வொரு கடிகாரத்துடனும், ஒரு காரண்டி சர்டிபிகேட்டும், ஒரு நேர்த்தியான ஸ்ட்ராப், ஒரு வெல்வெட் பெட்டியும் இனாமாகக் கொடுக்கப்படும். பாக்கிங், தபால் செலவு இலவசம்.

## இலவசம்

புது வருஷ காலண்டரும், மடக்கக் கூடிய சீப்பும் இணைக்கப்பட்ட தையல் இல்லாத அமெரிக்கன் பிளாஸ்டிக் மணிபர்ஸ் ஒன்றும் ஒவ்வொரு கடிகாரத்துடனும் இலவசமாக அனுப்பப்படும்

குறைந்த விலைகளின் விவரம் கீழ்க்காணுமாறு:



வாடர் புரூப், ரேடியம் சைஸ் 10½

நெ. ரூ.
1 க்ரோம் ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 49/-
2 ரோ.கோ. ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 51/-



பெரிய ரவுண்டு சைஸ் 9¾

நெ. ரூ.
3 க்ரோம் ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 39/-
4 ரோ.கோ. ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 41/-



சென்டர் செகண்ட் சைஸ் 9¾

5 க்ரோம் ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 39/-
6 ரோ.கோ. ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 41/-



வளைவு சைஸ் 7¾

7 க்ரோம் ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 39/-
8 ரோ.கோ. ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 41/-



டன்னோ சைஸ் 6¾

9 க்ரோம் ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 39/-
10 ரோ.கோ. ஸ்டீல்பேக் 15 ஜுவல்ஸ் 41/-



லேடீஸ் சைஸ் 5½

11 ரோ.கோ. ஸ்டீல்பேக், ஸில்க் ஸ்ட்ராப், பென்ஸி டயல் 15 ஜுவல்ஸ் 50/-

**PEARL WATCH CO., P. B. No. 6514, BOMBAY - 26**

மனம் அமைதி இழந்து விடும். அவன் வரச் சிறிது நேரம் ஆகிவிட்டால்கூடத் தவியாய்த் தவிப்பேன். குடிகாரன், தான் குடிக்கும் போதைப் பொருள் குறிப்பிட்ட நேரத்தில் கிடைக்கா விட்டால் எப்படி ஆலாய்ப் பறப்பான்? அதே நிலைமையைத்தான் நானும் அடைந்து விடுவேன். நான் அவனை எதிர் பார்த்து எதிர்பார்த்து மணிக் கணக்காக வாசற்படியிலேயே நிற்பேன். எனக்குக் கடை வியாபார விஷயத்திலே மனம் நாட்டம் கொள்ளாது. என் கண்கள் வழிமேல் விழி வைத்த வண்ணம் 'அவன் எப்பொழுது வருவானோ?' என்று ஒருமைப்பட்ட உள்ளத்துடன் களைப்படையாமல் நோக்கிக் கொண்டே இருக்கும். இவ்வளவு பக்தி சிரத்தையுடன் பக்தன் கூடத் தான் வழிபடும் தெய்வத்தை வணங்க மாட்டான் என்பது தான் என் அபிப்பிராயம்.

ஆனால் ஒரு விஷயம். என் நிலைமை மட்டும் தான் அப்படி இருந்தது என்பதில்லை. அவனுடைய நிலைமையும் என் நிலைமையையேதான் ஒத்திருந்தது. ஒருதலைக் காமமாயிருந்துவிட்டால் அதில் என்ன சுவாரஸ்யம் இருக்க முடியும்? என்னைப் பார்த்ததும் அவனுடைய முகத்திலே தனிக் களை வீசத் தொடங்கி விடும்; அவனுடைய அகன்ற நீண்ட அழகிய விழிகளிலே மின்னொளி பளிச்சிடும். அடிக்கடி அவன் என்னிடம், "உன்னையின்றி எனக்கு இன்பம் இல்லை. உன்னைப் பிரிந்து வீட்டுக்குச் சென்று விட்டால், என் அன்புக் கன்பான பொருளைப் பறி கொடுத்தவன் போலாகி விடுகிறேன். உனக்கு என்ன? நீ கடையில் உட்கார்ந்து உன் வேலையைக் கவனிக்கிறாய். நானோ வீட்டுக்குப் போய் உன்னை எண்ணிக் கண்ணீர் பெருக்கிக் கொண்டிருக்கிறேன். என் நிலையை ஒருவாறு உணர விரும்பினால், நீரில் வாழும் மீனைப் பிடித்துக் கொதிக்கும் மணலில் போட்டுப் பார், தெரியும்! அது போலத்தான் என் உள்ளம் உனக்காகத் துடியாய்த் துடித்துத் தவியாய்த் தவிக்கிறது!" என்று சொல்லுவான்.

இதைக் கேட்கும் பொழுது நான் இறக்கை கட்டிக் கொண்டு சொர்க்கத்துக்கே பறந்து விடுவேன். உலகத்து இன்பங்கள் அனைத்தும் எனக்காகவே உண்டாக்கப்பட்டிருப்பதாகவும், என்னைப் போன்ற பாக்கியசாலி இந்த உலகத்திலேயே இருக்க முடியாது என்றும் எண்ணி நான் இறுமாந்துபோவேன். ஆனால் சகோதரா! அந்தக் கனவு இப்பொழுது கலைந்து விட்டது. என்னைப் பிடித்த அந்த மோகினி என்னை விட்டு மாயமாக மறைந்து விட்டது. ஆனால் இன்றும் என் அசைக்கமுடியாத அபிப்பிராயம் என்ன, தெரியுமா? இன்றுவரை நான் ஸ்டெலாவைப் போன்ற அழகியைப் பார்த்ததே இல்லை என்பதுதான். இந்த அபிப்பிராயத்தை உள்ளத்திலிருந்து களைந்தெறிவதற்கு என்னாலான மட்டும் முயற்சி செய்து செய்து பார்க்கிறேன். ஆனால் நான் அசைக்க அசைக்க அது வேரூன்றுகிறதே ஒழிய, என் மனத்தை விட்டு அகலுவதாயில்லை.

அழகில் அரம்பையர்களைப் பற்றி நான் எத்தனையோ கதைப் புத்தகங்களில் படித்திருக்கிறேன். உள்ளத்தைக் கிறங்கவைக்கும் கவர்ச்சி மிகுந்த அவர்களுடைய எழிலுருவத்தைப் படங்களில் பார்த்திருக்கிறேன். இருதயத்தைக் கொள்ளை கொள்ளும் அவர்களுடைய கடைக்கண் வீச்சை நாடகங்களிலே கண்டிருக்கிறேன். ஆனால் உண்மையில் இவையெல்லாம் இந்த உலகத்திலேயே நிகழக் கூடியவை என்ற எண்ணம் இது வரை எழுந்ததில்லை. ஸ்டெலா என்னுடைய அந்த எண்ணத்தை அடியோடு மாற்றி விட்டாள். நான் கதைகளிலும் காவியங்களிலும் படித்திருந்த அவ்வளவு அங்க லட்சணங்களும் ஸ்டெலாவிடம் குடிகொண்டிருந்தன. அவளுடைய அந்த இன்ப முகம் இன்னும் என் கண் முன்னே நிற்கிறது. நகரத்தில் உள்ள எத்தனையோ லட்சாதிபதிகள் அவளுக்காகத் தங்கள் உயிரைக் கொடுக்கக் கூடச் சித்தமாயிருந்தார்கள். ஆனால் அவள் என்னைத் தவிர வேறு யாரையும் கண் நிமிர்ந்து பார்க்கக்கூட விரும்பவில்லை. இதை அறிந்த நான் வெறி பிடித்தவன் போல் ஆடத் தொடங்கிவிட்டேன். ஸ்டெலா என்னுடையவள், என்னிடமிருந்து அவளை யாராலும் பிரிக்க முடியாது என்ற எண்ணத்தில் என்னுடைய மனமயில் களிநடம் புரியத் தொடங்கி விட்டது. நினைத்த கருமம் கைகூடிவிட்டால் யாருக்கும் மகிழ்ச்சி ஏற்படுவது இயல்புதானே? (தொடரும்)



"டாக்டர் ஸார், என் சரீரம் பெருத்துக் கொண்டே போகிறது. இப்பொழுது 280 பவுண்டு இருக்கிறது. இதை எப்படியாவது குறைக்க வேண்டுமே!"

"அப்படியா? உமது சரீரத்தின் குறைந்த பக்ஷமாக இருந்த பவுண்டு எவ்வளவு என்று சொல்ல முடியுமா?"

"ஆகா, பேஷாய்ச் சொல்ல முடியும். ஆறு பவுண்டு!"




"பல வருஷங்கள் கில் வாதத்தினால் துன்புற்று நிலைமை வர வர மோசமாகியும் வந்தது. கடைசியில் "க்ருஷேனை" உபயோகித்துப் பார்க்குமாறு சொன்னார்கள். எனக்கு அது பூரண குணத்தை அளித்ததோடு வலி முதலியவைகளின்றி எனது வேலைகளைச் சரிவரச் செய்யுமாறும் செய்தது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன். கில் வாயுவினால் அவதியுறும் ஒவ்வொருவருக்கும் "க்ருஷேனை"யே எப்பொழுதும் நான் சிபார்சு செய்வேன்."—W. T. A.

சாதாரணமாகக் கில் வாயுவானது. சிறு நீரிலுள்ள வண்டல்கள் எலும்புச் சந்திகளிலும் (பூட்டுகள்) தசைகளிலும் தங்கி விடுவதாலேயே ஏற்படுகிறது. "க்ருஷனி"ன் ஆறுவித உப்புக்கள் இத்தேக்கங்களைக் கலைத்து மூத்திர கோசங்களையும் குடல்களையும் நன்கு தூண்டி அக்கழிவு பதார்த்தங்களை வெளித்தள்ளும்படிச் செய்கிறது. தினந்தோறும் ஒரு சிறு அளவு "க்ருஷன்", ஜலத்திலோ, டீயுடனோ உட்கொள்ளுவது உங்களைக் கில் வாயுவினின்று விடுபட்டவராகச் செய்யும்.

**"க்ருஷேன்"** உங்களது ஆரோக்கியத்திற்கும் ஆனந்தத்திற்கும் இன்றியமையாத உதவி

KSM—4

# மோகினி



மகாராஷ்டிரக் கதை: ஸி. ஒய். மராதே
மொழி பெயர்ப்பு: வாஞ்சி

1942-ம் ஆண்டிலே ஏராளமான இளைஞர்கள் மரணத்தைத் துச்சமாக மதித்துத் தேசப் பணியில் ஈடுபட்டார்கள் அல்லவா! அப்போது பலர் தாங்கள் இறக்கும் வரையில் சுதந்திரப் போர்முனையிலிருந்து பின் வாங்குவதில்லை என்று உறுதி கொண்டார்கள். பிரிட்டிஷ் ஆட்சி யந்திரத்தை நொறுக்குவதற்கான பல காரியங்களிலும் துணிச்சலுடன் இறங்கினார்கள்.

அந்தப் போரில் பலர் தங்களுடைய உயிரைத் தவிர மற்றபடி சொத்து, சுதந்திரம், உற்றார் உறவினர் யாவரையும் இழந்தனர். வேறு பலர் உயிரையும் இழந்து தியாகத்தின் சிகரத்தை அடைந்தார்கள்.

அவர்களுடைய தியாகம் மிகப் புனிதமானது. ஏனெனில் அவர்கள் பணத்தையோ, புகழையோ, பெயரையோ சிறிதும் விரும்பவில்லை. அந்த இணையற்ற தியாகிகளின் பெயர்கள் கூடப் பெரும்பாலோருக்குத் தெரியாது!

* * *

அந்த வருஷத்தில் தேசத் தொண்டிலும் பலாத்கார நடவடிக்கைகளிலும் ஈடுபட்ட விநாயக்கும் மற்றும் சிலரும் பிறகு, கொடிய ரோகிகளுக்கு ஒரு விடுதி அமைக்கும் கைங்கர்யத்தில் தங்கள் வாழ்க்கையை அர்ப்பணம் செய்ய முற்பட்டார்கள். அதற்காக நிதிவசூல் செய்து விடுதி அமைப்பதில் வெற்றியும் பெற்றார்கள். அந்த விடுதி இன்றும் நடந்து வருகிறது.

விநாயக் அந்தத் தொண்டில் ஈடுபட்டிருந்த போதுதான் அவன் தேகத்திலும் மேற்படி ரோகத்தின் அறிகுறிகள் தென்படலாயின.

உடனே அவன் ஒரு காம்பவுண்டுக்குள் இருந்த தனி வீட்டுக்கு ஜாகை போனான். அந்தத் தொத்து நோய்க்கு, தான் இலக்கானதுபோல் வேறு ஒருவரும் இலக்காகக் கூடாது என்பது அவனது எண்ணம்.

அந்த வீட்டில் பிறர் உதவியின்றித் தானே சமைத்துச் சாப்பிடவும் ஏற்பாடு செய்து கொண்டான். சாமான்களை வாங்கிக் கொடுப்பதற்கு மாத்திரம் ஒரே ஒரு வேலைக்காரனை அமர்த்திக்

"விநாயக், நீ தனியாக வசிப்பதைக் குறித்து உன் அண்ணா எவ்வளவு மனவேதனைப் படுகிறார், தெரியுமா! நீ இங்கு தனியாகச் சமைத்துச் சாப்பிடுவதை அவர் சகிக்கவே மாட்டார். தவிர, நான் இருக்கும்போது நீ ஏன் சமைத்துச் சாப்பிட வேண்டும்! தினந்தோறும் நான் உனக்கு உணவு இங்கு எடுத்து வந்து விடுகிறேன். நம் வீடு என்ன வெகு தூரத்தில் இருக்கிறதா!" என்று அன்புடன் கூறினாள் அவள்.

அவளது வார்த்தைகளில் அன்பும் ஆதரவும் வாத்சல்யமும் ததும்பின. அதைக் கண்டு இளம் காளையான விநாயக்கின் கண்களில் கண்ணீர் ததும்பி நின்றது.

"அண்ணி! தேசத்தொண்டில் ஈடுபட்டுச் சிறை செல்லாமல் உன்னைப்போல் வீட்டு வேலை செய்து கொண்டிருக்கும் பெண்களை ஒரு காலத்தில் நானும் என் நண்பர்களும் மிகவும் ஏளனம் செய்து வந்தோம். ஆனால் உன் பெருமை இப்போதுதான் எனக்குத் தெரிகிறது. என் சொந்தத் தாயைப் போல் நீ எனக்குப் பரிவு காட்டும்போது உன் காலடிகளில் விழுந்து வணங்க வேண்டும் என்று தோன்றுகிறது. என் ரோகத்தைச் சிறிதும் லட்சியம் செய்யாமல் நீ எனக்குச் சாப்பாடு கொண்டு வருவதைக் காட்டிலும் சிறந்த தியாகம் வேறு என்ன இருக்க முடியும்!" என்றான் விநாயக்.

"இதில் தியாகம் என்ன இருக்கிறது! என் கடமையை நான் செய்கிறேன். உன்னுடைய அண்ணா உன் தேசபக்தியைப் பற்றி எவ்வளவு புகழ்கிறார், தெரியுமா!"

"அண்ணி! என் 'தேசபக்தி' என்று நீ சொல்வதைக் கேட்க எனக்கு வெட்கமாக இருக்கிறது. விதவையான என் சகோதரியை உன்னிடம் வைத்துக்கொண்டு அவள் மனம் எள்ளளவும் நோகாமல் நீ ஆதரித்து வருகிறாய். ஒன்றுக்கும் உதவாத என்னிடம் தாயைக் காட்டிலும் அதிக அன்பு காட்டுகிறாய். இப்போது சிறந்த முறையில் நடந்து கொண்டிருக்கும் ரோகிகளின் விடுதிக்கு நாங்கள் நிதி வசூலிக்கப் புறப்பட்டபோது நீதான் முதன் முதலாகப் பணம் கொடுத்தாய். பரிசுத்தமான உன்னை

முகத்தைச் சிறிதும் சுளித்துக் கொள்ளாமல் அவர்கள் கேட்டதைக் கொடுக்கிறாய். ஒருவருக்கும் தெரியாமல் அடக்கமாக நீ செய்யும் ஒவ்வொரு காரியமும் பிறருக்கு மிகுந்த பலனைக் கொடுப்பதாக இருக்கிறது. ஆனால் நாங்கள் செய்த காரியங்களை நினைத்தாலோ......'' என்று பெருமூச்சு விட்டான் விநாயக்.

''சரி, சரி. உன் பிரசங்கம் போதும். வயிறு நிறையச் சாப்பிடு'' என்று அவள் பேச்சை மாற்றினாள். தன் புடவைத் தலைப்பால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

நாராயண ராவும் தமது சகோதரனான விநாயக்கை அடிக்கடி வந்து பார்த்தார். அன்புடன் பேசிக் கொண்டிருந்து விட்டுப் போனார். தமது தம்பி கொடிய ரோகத்துக்கு இலக்கானதைக் குறித்து அவரது உள்ளம் உருகியது. இருந்தாலும் பலாத்கார நடவடிக்கைகளின் விளைவாக அவன் உயிருக்கு ஆபத்து ஏற்படாமல் அவன் திரும்பி வந்ததைக் குறித்து அவர் ஆறுதல் அடைந்தார்.

இரவு பகலாகத் தேசத் தொண்டிலும் சமூகத் தொண்டிலும் ஈடுபட்டிருந்த விநாயக் இப்போது தான் தன்னைத் தனியனாக ஒரு வீட்டில் அடைத்துக் கிடக்க நேர்ந்ததை முதலில் கடுமையான தண்டனையாகக் கருதினான்.

ஆனால் சில நாட்களில் அவனுக்கு அது தண்டனையல்ல என்றும் ஒரு வரப்பிரசாதமே என்றும் தோன்றியது!

அவனுக்குச் சிறு வயதிலிருந்தே சங்கீதத்தில் எல்லையற்ற பற்றுதல் இருந்து வந்தது. ஒரு காலத்தில் அவன் சாரங்கி வாத்தியத்தில் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தான். தேசத் தொண்டில் ஈடுபட்டிருந்தபோது அவனுக்குச் சாரங்கியைத் தொடுவதற்குக் கூட நேரமில்லை. இப்போது இருபத்து நாலு மணி நேரமும் தனியாக இருந்த அவனுக்குச் சாரங்கி வாத்தியம் உறுதுணையாக அமைந்தது. அவனுக்குத் தினந்தோறும் உணவு கொண்டு வரும் அவனது அண்ணிகூட அவனது வாசிப்பில் லயித்து அப்படியே வாசற்படிக்கு அப்பால் நின்று விடுவது உண்டு.

ஒரு சமயம் விநாயக் மிகவும் உருக்கமாக வாசித்துக்கொண்டிருந்த தன் சாரங்கியைச் சட்டென்று கீழேவைத்து விட்டு, ஜன்னலுக்கு அருகில் வந்து நின்று நட்சத்திரங்களைப் பார்த்தான். உடனே அப்பால் மறைந்து கொண்டான்.

ஏனெனில் அவ்வமயம் அடுத்த பங்களாவின் காம்பவுண்டுக்கு அருகில் ஒரு பெண் நின்று கொண்டு விநாயக் இருந்த அறையின் ஜன்னலையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

அதிலிருந்து ஒவ்வொரு நாளும், இரவில்கூட, விநாயக் சாரங்கி வாசிக்கும் போதெல்லாம் அந்தப் பெண் பங்களாவிலிருந்து அவனது அறையின் ஜன்னலையே உற்றுப் பார்ப்பது வழக்கமாகி விட்டது.

* * *

ஒரு நாள் விநாயக்கைப் பார்க்க மந்தாகினி வந்தாள். சில வருஷங்களுக்கு முன் அவன் மந்தாகினியைக் கல்யாணம் செய்து கொள்ள மறுத்து விட்டான். அவளை வேறு ஒருவனுக்கு விவாகம் செய்து கொடுத்து விட்டார்கள்.

அப்படியிருக்க மந்தாகினி அந்த நிலையில் அவனைப் பார்க்க ஏன் வரவேண்டும்!

'நீ என்னைக் கல்யாணம் செய்துகொள்ள மறுத்தது நல்லதுதான். அன்று நீ மறுத்திராவிட்டால் என் கதி என்னவாகி யிருக்கும்' என்று இடித்துக் காட்டுவதற்காக அவள் வந்திருக்கிறாளா! அல்லது



தன்னை இன்னும் அவன் மறக்கவில்லையா! அல்லது 'அன்று பெண்களையே ஏறெடுத்துப் பாரேன் என்று சொல்லிக் கொண்டிருந்தாயே! இன்று அடுத்த பங்களாவில் உள்ள பெண்ணிடம் உன் மனதைப் பறி கொடுத்துவிட்டாய் அல்லவா!' என்று இடித்துக் காட்டுவதற்காக இங்கு வந்திருக்கிறாளா!

இவ்வாறாக விநாயக்கின் மனதில் அலைகளைப் போல் பல்வேறு எண்ணங்கள் மோதிக்கொண்டு எழும்பின.

ஏற்கெனவே அமைதியை இழந்திருந்த விநாயக்கின் மனதை மந்தாகினியின் விஜயம் இன்னும் அதிகமாகக் கிளறி விட்டது.

அவன் ஜன்னலண்டை வந்து பார்த்தான். என்ன ஆச்சரியம்! அவன் அண்ணி அல்லவா அந்தப் பெண்ணுடன் பேசிக் கொண்டிருக்கிறாள்!

விநாயக்கின் மனம் அடித்துக் கொண்டது. ஒருவேளை அவன் அடிக்கடி ஜன்னல் வழியாகப் பார்ப்பதை அவள் கவனித்திருக்கலாம். அதை ஆட்சேபித்து அவன் அவனுடைய அண்ணியிடம் புகார் சொல்லுகிறாளோ, என்னவோ! அண்ணி உள்ளே வந்தால் எல்லாம் தெரிந்து விடும்.

அண்ணி உணவுடன் உள்ளே வந்தாள். ''விநாயக்! உன்னைப் பார்க்க இங்கு மந்தாகினி வந்திருந்தாளா!'' என்று பரபரப்புடன் கேட்டான்.

அவளோ தன் அண்ணியும் அடுத்த பங்களாவில் உள்ள பெண்ணும் என்ன பேசிக் கொண்டிருந்தார்கள் என்பதைக் கேட்கத் துடித்துக் கொண்டிருந்தான்.

''வந்திருந்தாள்'' என்றாள் விநாயக் வெகு அசுவாரஸ்யமாக.

''வந்திருந்தாளா! அவள் என்ன சொன்னாள்?''

''அவள் என்னிடம் சொல்லுவதற்கு என்ன இருக்கிறது! அவளோ நாலு குழந்தைகளுக்குத்



தாயாகி விட்டாள். என்னைக் கல்யாணம் செய்து கொள்ள முடியாமல் விதி தன்னைக் காப்பாற்றியது என்று நினைத்துக்கொண்டு அவள் என்னைப் பார்க்க வந்திருக்கலாம்.''

''விநாயக்! ஏன் இப்படி யெல்லாம் பேசுகிறாய்! பெண்களின் மன நிலைமை பெண்களுக்குத்தான் தெரியும். உன் பெயரை எடுக்கும்போதெல்லாம் மந்தாகினி உணர்ச்சி வசமாகி விடுகிறாள்....அது கிடக்கட்டும். இன்று ரொட்டி கல்லைப்போல் கெட்டியாக இல்லையா? இன்று மாவைச் சரியாகப் பிசையவில்லை'' என்றாள்.

''அண்ணி! இன்று தான் ரொட்டி அமிர்தமாக இருக்கிறது. தங்க உள்ளம் படைத்த நீ அன்புடன் தயாரிக்கும் ரொட்டியைப் பழுது சொல்ல நான் என்ன நன்றி கெட்டவனா!''

''இப்படியெல்லாம் பேசாதே, விநாயக். நான் உனக்கு என்ன பிரமாதமாகச் செய்துவிட்டேன்! நீ தேசத்துக்குச் செய்த தொண்டில் நூற்றில் ஒன்றுகூட நான் உனக்குச் செய்யவில்லையே!'' என்றாள் அவள்.

விநாயக் மௌனமாக இருந்தான். அவனது அண்ணி மேலும் தொடர்ந்து ஒரு முக்கிய விஷயத்தைச் சொல்ல ஆரம்பித்தாள்.

''அடுத்த பங்களாவில் உள்ள பெண் இன்று என்னிடம் ஒரு விஷயம் சொன்னாள். அவள் எவ்வளவு அழகாக இருக்கிறாள், தெரியுமா! அவளுடைய உதடுகளின் அழகு ஒன்றே போதும்! அவள் நேற்று ஒரு நாகப்பாம்பைப் பார்த்தாளாம். அது இந்த வீட்டுப் பக்கமாக வந்தது என்று பரபரப்புடன் சொன்னாள்.''

''அப்படியா! நாகப்பாம்பு கடித்தால் இந்த ரோகத்துக்கு நல்லது என்று சொல்லுவார்களே, உனக்குத் தெரியுமா!'' என்றான் விநாயக்.

உடனே அவள் பதறிப்போய் விட்டாள்.

''விநாயக், நீ இப்படிப் பேசி ஏன் என் மனத்தைப் புண்படுத்துகிறாய்!'' என்றாள். அவள் கண்களில் கண்ணீர் ததும்பி வழிந்தது.

''அண்ணி, தயவுசெய்து என்மீது கோபித்துக் கொள்ளாதே. எங்கேயோ நான் கேள்விப்பட்டிருந்ததைச் சொன்னேன். அவ்வளவுதான், அது கிடக்கட்டும்; அந்தப் பெண்ணை உனக்குத் தெரியுமா!'' என்று கேட்டான் விநாயக்.

''நான் தினந்தோறும் உணவு கொண்டுவரும் போதெல்லாம் அவள் பங்களா கேட்டில் நின்று கொண்டு என்னையே பார்த்துக் கொண்டிருப்பது வழக்கம். ஆனால் நான் அவளுடன் பேசுவதில்லை. நேற்று அவளாக என்னைக் கூப்பிட்டு இந்த விஷயத்தைச் சொன்னாள். அவள் அதைச் சொன்ன போது, அவளுக்கு நாக்குத் தழு தழுப்பானேன்! மேலும் 'இங்கே யார் இருக்கிறார்! யாருக்காக நீங்கள் தினம் சாப்பாடு கொண்டு வருகிறீர்கள்!' என்று என்னை ஆர்வத்துடன் கேட்டாள்.''

''இங்கு யார் வசித்தால் அவளுக்கு என்ன!'' என்றான் விநாயக் ஒன்றும் தெரியாதவனைப்போல.

''இங்கு என் தம்பி இருக்கிறான்'' என்று அவளிடம் சொன்னேன்.

அவள் விடவில்லை. 'ஏன் இங்கே வசிக்கிறார்! அவரை நான் பார்த்ததே யில்லையே! அவர் ஏன்

வெளியிலேயே வருவதில்லை!' என்று மேலும் சில கேள்விகளைக் கேட்டு என் வாயைக் கிண்டினான்.''

"நீ என்ன பதில் சொன்னாய்!'' என்றான் விநாயக். அவன் தன் ஆர்வத்தை மறைத்துக் கொள்ள முயன்றான்.

"அவனுக்கு நான் என்ன பதில் சொல்லுவது! நீ யோகாப்பியாசம் செய்கிறாய் என்றும், அதனால் நீ வெளியே வருவதில்லை என்றும் சொன்னேன்.''

"பேஷ்! அண்ணி! உன் சமயோசித புத்திக்காக உனக்கு ஒரு வைரப் பதக்கம்தான் வெகுமதி அளிக்க வேண்டும்'' என்றான் விநாயக்.

உடனே இருவரும் சிரித்தனர்.

ஆனால் அவன் அண்ணிக்கு ஏற்பட்ட சிரிப்பு ஒரு விநாடியில் மறைந்து விட்டது. "என்ன செய்கிறது! நம்மைக் கடவுள் சோதிக்கிறார். அது போதாதென்று இவர்கள் புண்ணில் கோலிடுவதுபோல் ஏதாவது வாயைக் கிண்டி வம்பு அளக்கிறார்கள்'' என்று அலுத்துக் கொண்டாள்.

* * *

விநாயக் சிறு வயதிலேயே தன் தாயை இழந்தவன். எனினும் அவனுக்குத் தன் தாயை இழந்தோமே என்ற குறை இல்லை. அவனது அண்ணிதான் தாயைக் காட்டிலும் அதிகமாக அவனிடம் பரிவும் அன்பும் காட்டி வருகிறாளே!

தினந்தோறும் அவனுக்குத் தன் அண்ணி அன்புடன் பேசிய பேச்சு அவனது சரீர நோய்க்கும் மனநோய்க்கும் அமுதம்போல் இருந்தது.

'என் அண்ணி ஒரு தெய்வப் பிறவி. நான் யோகாப்பியாசம் செய்வதாக அந்தப் பெண்ணிடம் சொன்னாளே! எவ்வளவு நல்ல உள்ளம்! எத்தகைய அற்புதமான கற்பனை! நான் உண்மையிலேயே யோகாப்பியாசத்தில் ஈடுபட்டு அண்ணியின் வார்த்தை உண்மையாகும்படி செய்தால் என்ன!......அது முடியாத காரியம். நோய்வாய்ப்பட்டுள்ள எனக்கும் யோகத்துக்கும் வெகு தூரம்' இவ்வாறாக அவன் மனத்தில் சிந்தனை அலைகள் எழும்பி மறைந்தன.

அண்ணியையும் அவளுடைய அன்பையும் நினைக்கும்போதெல்லாம் விநாயக்கின் மனத்தில் அமைதி ஏற்பட்டது. நோயின் வேதனைகூடத் தணிவதுபோல் தோன்றியது. ஆனால் அதற்கு முற்றிலும் மாறாக, அடுத்த பங்களாவில் உள்ள பெண்ணின் ஞாபகம் அவன் மனத்தில் புயலை உண்டாக்கியது. அவன் தேகத்தை நெருப்பு இல்லாமலே எரிக்கத் தொடங்கியது.

அன்றிரவு அவனுக்குத் தூக்கமே வரவில்லை. சாரங்கியை எடுத்து வாசித்தான். வெகு நேரம் வாசித்துக்கொண்டிருந்தான். அதில் அவன் மனம் லயிக்கவில்லை. பிறகு அதைக் கீழே வைத்தான். எழுந்து அறையில் உலாவினான். ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தான். நன்றாகப் பார்த்தான். இரவு நேரத்தில் வெட்கப்பட அவசியமில்லை யல்லவா!



ஆனால், வழக்கம் போல் அந்தப் பெண்ணை ஏன் காணவில்லை! ஒரு வேளை தன்னை ஒரு யோகி என்று அண்ணி சொன்னதால், அவளுக்குத் தன்மீது வெறுப்பு ஏற்பட்டு விட்டதோ என்று நினைத்தான்.

மறுபடியும் திரும்பி வந்து உட்கார்ந்து சாரங்கியை வாசிக்க ஆரம்பித்தான். கண்களை மூடிக் கொண்டு அதில் லயித்துவிட்டான்.

அதனால் வெளிப் புறத்தில் யாரோ வந்ததையோ, கதவைத் திறந்ததையோ, தன் எதிரில் வந்து நின்றதையோ அவன் கவனிக்கவில்லை.

அவன் கண்களைத் திறந்த போது எதிரே காலோடு தலை மூடிக்கொண்டு ஓர் உருவம் நின்றது. அதைக் கண்டதும் சாரங்கி வாசிப்பதைச் சட்டென்று நிறுத்தி விட்டான். அந்த உருவம் பேசுவதற்கு இன்னும் ஒரு விநாடி தாமதம் ஏற்பட்டிருக்குமாயின், அவன் திடுக்கிட்டுப் போய் அலறியிருப்பான்.

"ஏன் வாசிப்பை நிறுத்தி விட்டீர்கள்! வாசியுங்கள்'' என்றது அந்த உருவம்.

ஆஹா! என்ன இனிமையான குரல்! அதைக் கேட்ட அவனுக்குத் தன் செவிகளில் தேவலோகத்தில் உள்ள அமிர்தத்தைக் கொட்டுவது போல் இருந்தது. அந்தக் குரல் ஒரு கந்தர்வப் பெண்ணின் குரலாகத்தான் இருக்க வேண்டும் என்று நினைத்தான். ஒரு வேளை தான் வாசித்த வாத்தியத்திலிருந்து கிளம்பிய அலைகளிலிருந்து அவள் உண்டாகியிருக்கலாம். இல்லாவிடில் நிசி நேரத்தில் திடீரென்று தன் எதிரில் ஒரு பெண் வந்து நிற்பது கற்பனைக்கும் எட்டாத விஷயம் அல்லவா!

"வாசிப்பை நிறுத்தி விடாதீர்கள். சொர்க்க லோகத்தில் உள்ள என்னைப் பூமிக்கு வரும்படி செய்து விடாதீர்கள்'' என்று கெஞ்சினாள் அவள்.

"ஆம்! நான் எண்ணியது சரிதான். தாங்கள் சொர்க்க லோகத்தில் உள்ள அப்ஸரஸ் பெண்தானே!''

"நீங்கள் என்னை அப்ஸரஸ் என்று நினைப்பதாயின் அப்படியே வைத்துக் கொள்ளுங்கள்.''

"இந்தத் துர்ப்பாக்கியசாலியின் வீட்டை நாடித் தாங்கள் எதற்கு வந்திருக்கிறீர்கள்!''

"தங்களுடைய தெய்விக சங்கீதத்துக்கு என் மனம் வெகு காலத்துக்கு முன்பே அடிமையாகி விட்டது. இப்போது என் சரீரத்தைத் தங்களிடம் அடிமைப்படுத்த வந்திருக்கிறேன்.''

விநாயக் திடுக்கிட்டான். அந்த அப்ஸரஸ், கந்தர்வப் பெண், மோகினி அவனை நெருங்கினாள். அவன் எழுந்து அப்பால் நகர்ந்துகொண்டான். அவனுக்குத் தான் ஏக காலத்தில் இன்பத்தின் எல்லையையும் துன்பத்தின் எல்லையையும் காண்பதுபோல் தோன்றியது. தன் கண்முன் தோன்றும் நம்ப முடியாத காட்சி கனவா அல்லது உண்மையா என்பதே அவனுக்குச் சந்தேகமாக இருந்தது.

'என்னைத் தொடாதே' என்று சொல்லி அறை

இவை இல்லாமலா
# கல்யாணம்?
## டி.எஸ்.ஆர்



- பன்னீர்
- சந்தனம்
- வாசனைப்பாக்கு
- வாசனைச் சுண்ணாம்பு

தென்னிந்தியாவில் எவ்வித விசேஷத்துக்கும் ஒரு சோபையையும் குளிர்மையையும் அளிக்க ஜனங்கள் டி. எஸ். ஆர். தயாரிப்புகளையே நாடுகிறார்கள். அவை 1909 லிருந்து மிகவும் பிரசித்தி பெற்றவை.

**டி.எஸ்.ஆர். & கோ., கும்பகோணம்.**

FAS-771-TAM

சென்னை நகரத்திற்கு டிஸ்ட்ரிபியூட்டர்கள் :
சுராஜ் ஏஜென்ஸிஸ், 37, ஜானி ஜான்கான் ரோட், திருவல்லிக்கேணி, மதராஸ்
கோயமுத்தூர், பாலக்காடு, நீலகிரிக்கு ஸோல் ஏஜண்டுகள் :
B. பாலபட்டாபி, (1933-ல் ஸ்தாபிக்கப்பட்டது) கோயமுத்தூர்

---

# B. I. S. N. கம்பெனி லிமிடெட்

**சென்னை - நாகப்பட்டினம் - பினாங்கு - சிங்கப்பூர்**

## S. S. "ரஜூலா"

சென்னை புறப்படும் தேதி — 1952 மே 22உ
நாகப்பட்டினம் புறப்படும் தேதி — 1952 மே 23உ

கப்பல் புறப்படும் தேதி காலை 6 மணிக்கு மேல் சாமான்கள் ஏற்றப்படமாட்டா.

கப்பலேறுவதற்கான ஏற்பாடுகள் :

**சென்னையிலிருந்து 22-5-52:** *பெர்த் வசதியற்ற பிரயாணிகள் காலை 10 மணிக்கும் ஊஜுரன் பிரயாணிகள் வைத்திய பரிசோதனைக்கும், கப்பலில் ஏறுவதற்கும் பகல் 12 மணி முதல் பகல் 1 மணிக்கு மேற்படாமல் வந்துவிட வேண்டும்.*

**நாகப்பட்டினத்திலிருந்து 23-5-52:** *பெர்த் வசதியற்ற டிக்கட்டுள்ளோர் காலை 6 மணிக்கும் ஊஜுரன் டிக்கெட் உள்ளவர்கள் 8 மணிக்கும் கப்பலேறலாம்.*

*சென்னையில் ஏறும் பிரயாணிகள் 22-5-52 பகல் 1 மணிக்கு மேல் வந்தால் வைத்திய பரிசோதனைக்கு தாமதமாகிவிடும். ஆகையால் அவர்கள் கப்பலேற முடியாது.*

*பினாங்கு, சிங்கப்பூர் துறைமுக சுகாதார விதிகளை அனுசரிக்க வேண்டி, விரும்ப தாம் எல்லா பிரயாணிகளும் சர்வதேச சுகாதார விதிகளின்படி அமைந்த பாரத்தில் அம்மை குத்தியதற்கான சர்டிபிகேட்டும், காலரா எதிர்ப்பு இஞ்ஜெக்ஷன் செய்ததற்கான சர்டிபிகேட்டும் பெற்று, ஒரு சர்க்கார் அல்லது முனிஸிபல் ஹெல்த் ஆபீஸரின் அத்தாட்சியுடன் செல்லுபடியாகக் கூடிய நிலையில் கொண்டுவர வேண்டும்.*

| பின்னி & கோ., (மதராஸ்) லிமிடெட் | மதுரா கம்பெனி லிமிடெட் |
|---|---|
| 7, அரமனைக்காரத் தெரு, மதராஸ் | முதல் லைன் பீச்ரோடு, நாகப்பட்டினம் |

யின் ஒரு மூலையில் போய் நின்றான். "என் தேகம் நீ தொடுவதற்கு உகந்ததல்ல" என்றான்.

"விசுவாமித்திரரின் தேகமும் அப்படித்தான். ஆனால் அவரிடம் மேனகை இன்பம் அனுபவிக்கவில்லையா!" என்று கேட்டாள் அவள்.

"விசுவாமித்திரரா! விசுவாமித்திரரின் பெயரைச் சொல்லக்கூட எனக்கு யோக்கியதை இல்லை."

"யோகிகள் பெண்களை வெறுப்பது சகஜம் தான்" என்றாள் அவள்.

"நான் யோகியல்ல, ரோகி."

"உங்களுடைய சரீரத்தின் வனப்புக்காக நான் உங்களைக் காதலிக்கவில்லை. உங்களுடைய யோகத்துக்காக, உங்களுடைய சங்கீதத்துக்காக, உங்களுடைய குணத்துக்காக உங்களைக் காதலிக்கிறேன். இந்தக் காதல் இன்று நேற்று உண்டானதல்ல; வெகு காலமாக வளர்ந்தோங்கிய காதல்" என்று சொல்லிய வண்ணம் அவள் தன் முகத்தை மூடிக் கொண்டிருந்த துணியை அப்பால் அகற்றி அவனை உற்றுப் பார்த்தாள்.

கனவு உலகத்திலும் கற்பனை உலகத்திலும் சஞ்சரித்துக் கொண்டிருந்த விநாயக் அப்போது தான் சுய உணர்வு பெற்றான். எதிரில் நிற்கும் பெண் சொர்க்க லோகத்தில் இருந்து வந்தவள் அல்ல என்பதை உணர்ந்தான். அடுத்த பங்களாவில் வசித்து வருபவள்தான் என்பதை விநாயக் தெரிந்து கொண்டான்.

இனி அதிக நேரம் தாமதித்தால் நிலைமை மோசமாகிவிடும் என்று அவனுக்குத் தெரிந்தது. சட்டென்று விளக்கை ஏற்றினான்.

"இதோ என்னைப் பார். உன் வாழ்நாளை வீணாக்கிவிடாதே. என்னைத் தொடவே தொடாதே. என்னை இனி மனதினாலும் நினைக்காதே. நாம் இனி அடுத்த ஜன்மத்தில்தான் ஒன்று சேர முடியும். அடுத்த ஜன்மத்தில் நான் உன்னையே மனைவியாக அடைவேன் என்பது நிச்சயம்" என்றான் ஆவேசம் வந்தவனைப் போல.

* * *

இரவு பன்னிரண்டு மணி அடித்தது. விநாயக்குடன் இரகசியமாகத் தொடர்பு வைத்துக் கொண்டிருந்த ஜயதேவ் அவனைப் பார்க்க வந்தான்.

"பிரிட்டிஷ் துருப்புகள் பர்மா முனைக்குச் செல்லும் பாதையில் உள்ள ஒரு பாலத்தை உடைக்க ஏற்பாடாகி விட்டது. மருந்துக்குத் தீ வைக்கும் பொறுப்பை நான் ஏற்றுக் கொண்டிருக்கிறேன். உன்னிடம் விடை பெற்றுக் கொள்வதற்காக வந்தேன்" என்றான் ஜயதேவ்.

"ஜயதேவ், இது வரையில் நான் என்னைத் துரதிர்ஷ்டசாலி என்று எண்ணிக் கொண்டிருந்தேன். ஆனால், என்னைப்போல் அதிர்ஷ்டசாலி இந்த உலகில் யாரும் இல்லை. என்மீது ஆசை கொண்டு ஒரு மணி நேரத்துக்கு முன் தேவ லோகத்திலிருந்து ஒரு மோகினி வந்தாள். என் மீது காதல் கொண்டு, என்னைக் கட்டித் தழுவ ஆசைப்பட்டாள். 'உன் ஆசை அடுத்த ஜன்மத்தில்தான் பூர்த்தியாகும்' என்று சொல்லி விட்டேன். அவ்வளவுதான்! உடனே கடல் பொங்கியது. புயல் அடித்தது. பூகம்பம் உண்டாயிற்று. இப்போது என் உடம்பெல்லாம் பற்றி எரிகிறது."

இதைக் கேட்டதும் ஜயதேவ் விநாயக்கை உற்றுப் பார்த்தான். விநாயக்கின் முகத்தில் என்றுமில்லாத ஒளி வீசியது. ஒன்று அவன் ஏதாவது இன்பக் கனவு கண்டிருக்க வேண்டும் அல்லது அவனுக்குச் சித்தப் பிரமை உண்டாகியிருக்க வேண்டும் என்று ஜயதேவ் முடிவு செய்தான்.

"ஜயதேவ், நீ எனக்கு ஓர் உதவி செய்வாயா!" என்றான் விநாயக்.

"என்னை நீ கேட்க வேண்டுமா! உனக்காக எதுவும் செய்யச் சித்தமாயிருக்கிறேன்."

"பாலத்தை உடைக்கும் பொறுப்பை நீ என்னிடம் ஒப்படைக்க வேண்டும்."

"விநாயக்! முடியவே முடியாது. நாம் எல்லோரும் தேசத்துக்காக உயிரைத் தியாகம் செய்வதென்று பிரதிக்ஞை செய்து கொண்டோம். அந்தப் பிரதிக்ஞையை நிறைவேற்ற இதுவரையில் எனக்குச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. இப்போது கிடைத்திருக்கும் சந்தர்ப்பத்தை நீ அபகரிக்கப் பார்ப்பது சரியில்லை. தவிர, நீ நோயாளி. அந்தப் பொறுப்பை உன் தலையில் சுமத்துவது கொடுமையாகும்" என்றான் ஜயதேவ்.

"ஜயதேவ். நான் சொல்லுவதைக் கேள். எனக்கு இந்த உதவி செய்துதான் தீர வேண்டும். நமது பிரதிக்ஞையை நிறைவேற்ற உனக்கு வேறு சந்தர்ப்பம் கிடைக்காமற் போகாது. எனக்கோ அப்படியல்ல. நீ என்னைப் பைத்தியம் என்று நினைக்காதே. கண்ணுக்குத் தெரியாத ஒரு தீ என்னை எரித்து வருகிறது. இன்றோ அல்லது நாளையோ அதற்கு நான் முற்றிலும் இரையாகி விடுவேன். மற்றவர்களைப் போல் விநாயக் வீட்டில் செத்துக்கிடக்க வேண்டும் என்பது உன் எண்ணமா!" என்றான் விநாயக் உணர்ச்சி ததும்ப.

சிறந்த தேசபக்தனான விநாயக்கின் கோரிக்கையை மறுபடியும் மறுக்கும் துணிச்சல் ஜயதேவுக்கு உண்டாகவில்லை.

* * *

பாலத்தை உடைப்பதற்கான திட்டம் ஏற்கெனவே பூர்த்தியாகி யிருந்தது. டாங்கி, பீரங்கி வண்டிகள் முதலியன செல்லுவதற்காகப் பாலத்தைப் பிரிட்டிஷ் அதிகாரிகள் பலப்படுத்திக் கொண்டிருந்தார்கள். பயங்கர இயக்கத்தைச் சேர்ந்த இளைஞர்கள் பல நாட்களாகக் கஷ்டப்பட்டுப் பாலத்தின் முக்கிய இடங்களில் வெடிமருந்துகளை வைத்து விட்டார்கள்.

கடைசி நாள் சல்லிகளை ஏற்றிக் கொண்டு செல்லும் லாரிகளில் விநாயக் ஒளிந்து செல்லவேண்டும்; அல்லது தொழிலாளர்களில் ஒருவரைப் போல் வேடம் பூண்டு செல்ல வேண்டும். சல்லிகளையெல்லாம் தொழிலாளர்கள் பாலத்தில் கொட்டிப் பாலத்தைப் பலப்படுத்துவார்கள். சூரியன் அஸ்தமிக்கும் சமயம் அவர்கள் லாரிகளைத் திருப்பிக்கொண்டு புறப்படுவார்கள். அவர்கள் புறப்பட்டுச் சிறிது தூரம் சென்றதும் பிரிட்டிஷ் துருப்புகள் பாலத்தைப் பரிசோதனை செய்ய வருவார்கள். அவர்கள் வருவதற்குள், ஒளிந்து கொண்டிருக்கும் விநாயக் மருந்துத் திரிக்குத் தீவைத்து விடவேண்டும்.—இதுதான் அவர்கள் போட்டிருந்த திட்டம்!

தேசபக்தர்கள் தயாரித்திருந்த அத் திட்டம் ஆச்சரியகரமாக நிறைவேறியது. பிரிட்டிஷார் பல மாதங்களாகக் கஷ்டப்பட்டுப் பலப்படுத்திய பாலம் ஒரு விநாடியில் உருத் தெரியாமல் தகர்ந்தது. அவர்களின் போர்த்திட்டம் பாழாகியது.

வீர சுவர்க்கம் அடைந்த விநாயக்கின் ஆத்மா சாந்தி அடைவதற்காக அன்றிரவு தேசபக்தர்கள் ஒன்றுகூடிப் பிரார்த்தனை செய்தனர்.

பாரதநாட்டின் சுதந்திரப் போரில் உயிரைத் தியாகம் செய்த பெயர் தெரியாத இளம் வீரர்களான தொண்டர்களில் விநாயக் ஒருவன் என்பது எத்தனை பேருக்குத் தெரியும்!

**மீண்டும் பாதி விலைக்குக் குறைவான சலுகை!**

**15 நாட்களுக்கு மட்டும்**

புகழ் வாய்ந்த ஸ்விஸ் பாக்டரியில் தயாரித்த கைக் கெடிகாரங்கள்.

ஒவ்வொன்றும் ஐந்து வருட உத்திரவாதம் கொண்டவை.



| | ஒரிஜனல் விலை | தற்போது விலை |
|---|---|---|
| ஜெர்மன் பாக்கெட் வாட்ச் | 24/- | 11/- |
| ,, உயர் ரகம் | 28/- | 14/- |
| இங்கிலீஷ் அலாரம் டைம்பீஸ் | 40/- | 19/- |

No. 525



Size 6½'''

| | | |
|---|---|---|
| 15 ஜூவல் ரோல்டு கோல்டு | 96/- | 45/- |
| 15 ஜூவல் 20 மைக்ரோன்ஸ் | 100/- | 48/- |

No. 526



Size 10½'''

| | | |
|---|---|---|
| 15 ஜூவல் ரோல்டு கோல்டு | 98/- | 48/- |
| 15 ஜூவல் 20 மைக்ரோன்ஸ் | 110/- | 52/- |

No. 527



Size 5¼'''

மிராத் ஷேப்

| | | |
|---|---|---|
| 5 ஜூவல் க்ரோம் கேஸ் | 45/- | 22/- |
| 5 ஜூவல் ரோல்டு கோல்டு | 52/- | 25/- |

இரண்டு கடிகாரங்கள் ஆர்டர் செய்பவர்களுக்கு தபால் செலவு இலவசம்.

**PIONEER WATCH Co**

POST BOX NO 11428 CALCUTTA

அறிமுகப் படுத்துகிறோம்.....

# மைசூர் சோப்

## தனிக் கட்டிகள்

**சிறந்த சலவை சோப்**

*

கலப்படமற்றது, ஹானி யளிக்கும் மூலப் பொருள் களின் சேர்க்கையற்றது. மிகவும் பரிசுத்தமானது.

**கஷ்டமில்லாமல் துணிகளை வெளுக்கிறது**

நேரம், சிரமம், பணம், வேலை சகலத்தையும் மிச்சப் படுத்தி உங்களுக்குப் பரிபூரணத் திருப்தியை அளிக்கின்றது.

**இன்றே ஒரு கட்டியை வாங்கிப் பாருங்கள்.**

*

கவர்ன்மெண்ட் சோப் பாக்டரி

**பெங்களூர்**

# கொடுத்து வைத்தவன்

ஸ்ரீசுதன்

அவர் வீட்டு வாசல் வராந்தாவில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்த கைலாச மூர்த்தியை அன்று காலை விழிக்கச் செய்தது, அதே தெருவிலுள்ள கோடி வீட்டிலிருந்து எழுந்த நாதஸ்வர கீதம்தான். அந்த மேளச் சத்தம் கோடி வீட்டில் குடியிருந்து வந்த குப்புசாமியின் குழந்தை முதலாவது ஆண்டு நிறைவு வைபவத்தின் ஆரம்பத்தை ஊருக்கு அறிவித்துக் கொண்டிருந்தது.

குப்புசாமி குடியிருந்த வீடு கைலாச மூர்த்திக்குச் சொந்தமானது. பெரிய சர்க்கார் உத்தியோகத்திலிருந்து ரிடையர் ஆன கைலாசமூர்த்தி அவருடைய எஞ்சியிருந்த வாழ்க்கையைக் கழிக்க அந்த நகரில் வந்து குடியேறினார். அவர் இருப்பதற்கு வசதியாக ஒரு பெரிய வீட்டைக் கட்டிக் கொண்டார். சாப்பாட்டுக்கு வேண்டிய அளவுக்கு நெல்லும், தானியமும் கொடுக்கக் கூடிய நஞ்சை நிலமும் புஞ்சைக் காடும் கொஞ்சம் வாங்கிப் போட்டார். கையில் மிகுந்த பணத்தில் ஒரு பகுதியைச் செலவழித்துத் தெருக் கோடியில் ஒரு சிறிய வீட்டையும் கட்டி முடித்தார். அந்தச் சிறிய வீட்டில் வயல்களிலிருந்து வரும் நெல்லையும் மற்றும் சில தட்டு முட்டுச் சாமான்களையும் போட்டுப் பூட்டி வைத்திருந்தார்.

குப்புசாமி அந்த ஊருக்கு உத்தியோகமாக வந்ததும் குடியிருக்க வீடு கிடைக்காமல் கஷ்டப்பட்டு விட்டான். பிறகு யாரோ ஒருவரின் யோசனையின் பேரில் கைலாச மூர்த்தியை அணுகி அவருக்குச் சொந்தமான தெருக்கோடியிலிருந்த வீட்டைத் தனக்கு வாடகைக்குத் தரும்படி கேட்டுக்கொண்டான். கைலாசமூர்த்தியும் 'சரி' என்று ஒப்புக் கொண்டார். ஆனாலும் குப்புசாமி அந்த வீட்டின் வாடகையைப் பற்றிக் கேட்டபோது அந்த வீட்டிலிருந்து நான் வாடகை ஒன்றும் அதிகமாக எதிர்பார்க்கவில்லை. உம்மால் கொடுக்க முடிந்ததைக் கொடும். நீர் கொடுக்கும் பணம் தருமத்துக்குத்தான் ஒதுக்கி வைத்து உபயோகப்படுத்தப்படும் என்று கைலாசமூர்த்தி சொன்னதைக் கேட்ட குப்புசாமிக்கு அவன் காதுகளையே நம்ப முடியவில்லை. ஜனநெருக்கடியும் குடியிருப்பதற்கு வீட்டுத் தட்டுப்பாடும் நிறைந்த அந்த ஊரில் தன்னிடம் இவ்வளவு பரிவுடன் நடந்து கொள்ளும் குணம் படைத்த கைலாசமூர்த்தியிடம் குப்புசாமியின் மனத்தில் அன்பும் மரியாதையும் வளர ஆரம்பித்தன.

கைலாசமூர்த்தி அத்துடன் நிற்கவில்லை அவரும் அவர் மனைவி மங்களமும் குப்புசாமியின் குடும்பத்துக்கு வேண்டிய மற்றும் பல சௌகரியங்களையும் அவர்கள் கேளாமலேயே செய்து கொடுத்தனர். அந்த காரணத்தினால் குப்புசாமியும் அவன் மனைவி மஞ்சுளாவும் கைலாசமூர்த்தி தம்பதிகளைத் தங்களுக்குப் புதிதாகக் கிடைத்த உறவினர்களாகக் கருதினார்கள். குப்புசாமியின் வீட்டில் நடக்கும் வைபவங்களுக்கெல்லாம் அவன் கைலாசமூர்த்தியையும் அவருடைய சஹதர்மிணி மங்களத்தையும் அழைக்கத் தவறுவதில்லை. ஆனாலும் ஒவ்வொரு தடவையும் ஏதாவது காரணம் கூறி அந்த வைபவங்களுக்குப் போகாமல் இருந்து விடுவார்கள் கைலாசமூர்த்தி தம்பதிகள். அவர்களின் போக்கு குப்புசாமிக்கும் அவன் மனைவி மஞ்சுளாவுக்கும் புரியாத புதிராகவே இருந்தது.

அப்படியிருந்தும் அவர்களுக்குக் கைலாசமூர்த்தி தம்பதிகளிடம் இருந்த பற்று குறையவில்லை. ஒரு வாரத்துக்கு முன்னமேயே தன் வீட்டில் நடக்கவிருந்த அவனுடைய குழந்தையின் ஆண்டு நிறைவு வைபவத்துக்கு வரும்படி குப்புசாமியும் அவன் மனைவி மஞ்சுளாவும் நேரில் வந்து கைலாச மூர்த்தியையும் மங்களத்தையும் அழைத்துவிட்டுப் போயிருந்தார்கள். ஆனால் அன்றைக்குக் கைலாச மூர்த்திதான் வீட்டில் இருந்தார். மங்களம் ஏதோ அவசர காரியமாகப் பிறந்த வீட்டுக்குச் சென்றிருந்தாள். கைலாச மூர்த்தியும் சமையற்காரன் சங்கரனும்தான் வீட்டில் இருந்தனர்.

## 2

தூக்கம் கலைந்த கைலாசமூர்த்தி படுக்கையில் எழுந்திருந்து உட்கார்ந்தார். அவர் கண்களை நன்றாகத் திறந்து பார்த்தபோது எதிரில் குப்புசாமி நின்று கொண்டிருந்தான். அவன் அவரைப் பார்த்து "ஸார்! இன்றைக்குத்தான் என் குழந்தைக்கு ஆண்டு நிறைவு. அதை மறுபடியும் உங்களுக்கு ஞாபகப்படுத்த வந்தேன். நீங்கள் கொஞ்சம் மனது வைத்துக் கூடவந்திருந்து விசேஷத்தை நடத்திக் கொடுத்துக் குழந்தையையும் ஆசீர்வதித்து விட்டு வரவேண்டும். முன்பு இருந்ததுபோல் இந்தத் தடவையும் என் மேல் நீங்கள் பராமுகமாக இருந்து விடக்கூடாது" என்றான் பணிவுடன். பிறகு ஏதோ ஞாபகம் வந்தவன் போல் 'சௌகரியப்பட்டால் உங்கள் சமையற்காரன் சங்கரனை உதவிக்கு எங்கள் அகத்திற்கு அனுப்பிவைக்க வேண்டும்' என்று வேறு கேட்டுக் கொண்டான். பதில் சொல்லும் பாவனையாக கைலாசமூர்த்தி தலையை அசைக்கவே குப்புசாமி விடை பெற்றுக்கொண்டு சென்றான்.

கைலாசமூர்த்தி படுக்கையைச் சுருட்டி வைத்து விட்டு வீட்டுக்குள் நுழைந்தார். பின் கட்டிலிருந்த கிணற்றங்கரைக்குப் போய்ப் பல்லைத் துலக்கி விட்டு, கைகால் முகம் இவைகளைக் கழுவி நெற்றியில் விபூதி அணிந்து கொண்டு கூடத்துக்கு வந்தார். சமையற்கார சங்கரன் தயாராகப் போட்டு வைத்திருந்த காப்பியை இரண்டு டம்ளர்களில் ஊற்றி அவர் முன் கொண்டு வைத்தான். டம்ளர்களைக் கையில் எடுத்துக் கொண்டு கைலாச மூர்த்தி சங்கரனைப் பார்த்து, "குப்புசாமியின் குழந்தைக்கு இன்றைக்குப் பிறந்த நாளாம். விசேஷத்தை ஒட்டி ஏதோ விருந்து போடப் போகிறார் போலத் தோன்றுகிறது. உதவிக்கு உன்னை அங்கே அனுப்பும்படி என்னிடம் கேட்டுக் கொண்டார். நீ இப்பொழுதே போய் உன்னாலான ஒத்தாசையைச் செய்!" என்று கூறினார். சங்கரனும் குப்புசாமியின் வீட்டிற்குக் கிளம்பினான்.

தன் முன்னால் வைக்கப் பட்டிருந்த டம்ளர்களிலிருந்த சூடான காப்பியைச் சாப்பிட்டு முடித்ததும்தான் கைலாச மூர்த்தியின் மூளை சுறுசுறுப்பாக வேலை செய்ய ஆரம்பித்தது. குப்புசாமியின் வீட்டுக்குச் சங்கரன் போய் விட்டதால் பகல் சாப்பாட்டுக்குத் தானும் குப்புசாமியின் வீட்டுக்குப் போக வேண்டியிருந்த நிர்ப்பந்தம் அவருடைய நினைவுக்கு வந்தது. ஆனால் சாப்பாட்டுக்கு மட்டும் அங்கே போனால் குப்புசாமியின் மனத்

தில் அது வேறு விதமான தப்பு அபிப்பிராயங்களை எழுப்ப ஏதுவாகும். அதைத் தவிர்க்கச் சாப்பாட்டுக்கு முன் நடக்க விருக்கும் ஹோமம், ஆசீர்வாதம் முதலிய நிகழ்ச்சிகளுக்கும் தான் போக வேண்டிய அவசியத்தை உணர்வு அறிவுறுத்தியது. ஆனால் இதே சமயத்தில் பத்து வருஷங்களுக்கு முன் நடந்த ஒரு சம்பவம் அவருடைய நினைவுக்கு வந்தது. குழந்தைப் பேறு இல்லாத கைலாச மூர்த்தி தம்பதிகள் கைலாச மூர்த்தியின் தங்கை பெண்ணின் முதல் குழந்தையின் ஆண்டு நிறைவுக்குப் போயிருந்தார்கள். குழந்தைக்கு ஏற்கெனவே வியாதிகள் வந்து ஆரோக்கியமிழந்த காரணத்தால் பலஹீன மடைந்திருந்தது. இருந்தாலும் அதன் முதலாவது பிறந்த நாள் கொண்டாட்டத்தை விமரிசையாக நடத்தக் குழந்தையின் பெற்றோர்கள் ஏற்பாடு செய்திருந்தார்கள். அவர்கள் அழைப்புக்கு இணங்கித்தான் கைலாச மூர்த்தி தம்பதிகள் அந்த விசேஷத்தை நடத்தி வைத்து விலையுயர்ந்த பரிசு ஒன்றையும் குழந்தைக்குக் கொடுத்து விட்டு வந்தார்கள். பிறந்த நாள் நினைத்தன்று கோவிலுக்குப் போய் விட்டு வந்ததும், கைலாச மூர்த்தியின் தங்கையின் பெண் தன் குழந்தையைக் கைலாச மூர்த்தியிடம் கொடுத்து 'மாமா, எல்லோரையும் விட நீங்கள் தான் வயதில் மூத்தவர். நீங்கள்தான் முதன் முதலாகக் குழந்தையை ஆசீர்வாதம் செய்ய வேண்டும்' என்று வேண்டிக் கொண்டாள்.

அவருடைய மருமாள் அளித்த கௌரவத்தை ஏற்றுக் கொண்டு குழந்தையை ஆசீர்வதித்தார் கைலாச மூர்த்தி. ஆனால் துரதிர்ஷ்ட வசமாக சில தினங்கள் கழித்துக் குழந்தை பழைய வியாதியின் காரணமாகக் காலமாகி விட்டது. குழந்தையை இழந்த சோகத்தினால் அதன் பெற்றோர்கள் யாரிடமோ பேச்சு வாக்கில் அவளுடைய மாமா கைலாச மூர்த்தி கைராசி இல்லாதவர் என்றும், குழந்தை பாக்கியத்தையே அறியாத அவர் முதன் முதலாகக் குழந்தையைக் கையில் வாங்கி ஆசீர்வாதம் செய்ததின் பலனாகக் குழந்தை அற்பாயுளில் மரித்துவிட்டதென்றும் தெரிவித்து விட்டார்கள். இந்தச் செய்தி பாராபரியாகக் கைலாசமூர்த்தி தம்பதிகளின் காதுக்கு எட்டியதும் இருவரும் திடுக்கிட்டுப் போய்விட்டனர். ஏற்கெனவே குழந்தைகள் இல்லாத காரணத்தால் மனம் நொந்து போயிருந்த அவர்களுக்கு இந்தத் தகவல் மிகுந்த மன வேதனையைக் கொடுத்தது. அதுமுதல் தம்பதிகள் இருவரும் அவர்கள் உறவினர், சிநேகிதர் இவர்கள் வீட்டில் நடக்கும் எந்த வைபவத்திலும் நேரில் போய்க் கலந்து கொள்வதில்லை என்ற முடிவுக்கு வந்தனர்.

சென்ற அவல நிகழ்ச்சிகள் அவர் மனத் திரையில் நிழலாட ஆரம்பித்ததும், குப்புசாமியின் குழந்தை ஆண்டு நிறைவு விழா வைபவத்துக்குப் போவதா, அல்லது போகாமலிருப்பதா என்று தெரியாமல் தத்தளித்தது அவர் மனம். அவர் மனைவி மங்களம் ஊரிலிருந்தாலாவது அவளிடம் யோசனை கேட்டிருக்கலாம். அதற்கும் சௌகரியமில்லாமல் போய்விட்டது. குப்புசாமி மறுபடியும் வந்து வற்புறுத்திக் கூப்பிட்டால் என்ன பதில் சொல்லுவது என்று அவர் யோசனை செய்து முடிவதற்குள்ளேயே குப்புசாமியே வந்துவிட்டான். "ஸார், வயதில் பெரியவர்களாகிய நீங்கள்தான் முதன் முதலில் குழந்தையை வந்து ஆசீர்வாதம் செய்ய வேண்டுமென்று எல்லோரும் தீர்மானித்திருக்கிறோம். என் மாமனார் கூடக் காத்துக் கொண்டிருக்கிறார்" என்றான்.

கைலாசமூர்த்தி குப்புசாமியைப் பார்த்து, "நான் இன்னும் குளிக்கக் கூட இல்லை. வெந்நீர் காய்ந்து கொண்டிருக்கிறது" என்றார்.

"அப்படியானால் நீங்கள் குளித்து விட்டு வரும் வரை நான் இங்கேயே காத்துக் கொண்டிருக்கிறேன்" என்றான் குப்புசாமி.

குப்புசாமியின் தீர்மானத்துக்கு முன்னால் தன்னுடைய வைராக்யத்தின் தீவிரம் குறைந்து கொண்டே வருவதை உணர்ந்தார் கைலாச மூர்த்தி. அதன் விளைவாக எப்படியும் குப்புசாமியின் வீட்டுக்குப் போய்த்தான் ஆக வேண்டும் என்ற முடிவுக்கு வந்தார். இருந்தாலும் முதன் முதலாகத் தான் குழந்தையை ஆசீர்வாதம் செய்யும் துணிச்சல் அவர் மனத்தில் இடம் பெறவில்லை. குப்புசாமியைப் பார்த்து, "குப்புசாமி! ஆகவேண்டிய காரியங்களைக் கவனிக்க ஏற்பாடு செய்யுங்கள். எனக்காகக் காத்துக் கொண்டிருந்தால் ஆசீர்வாதத்துக்காகக் குறிப்பிட்டிருக்கும் நல்ல வேளை கழிந்து விடும். அங்கே வந்திருக்கும் பெரியவர்களை வைத்துக் கொண்டு ஆசீர்வாதம் செய்வதை ஆரம்பித்து விடும். நானும் ஒரு நொடியில்



வருகிறேன்'' என்று சொல்லிக் குப்புசாமியை வீட்டுக்கு அனுப்பி வைத்தார் கைலாசமூர்த்தி.

கைலாசமூர்த்தி குளித்து விட்டுத் தன் காரியங்களைக் கவனித்துக் கொண்டு குப்புசாமியின் வீட்டுக்குள் நுழையும்போது குப்புசாமியின் பந்துக்களும், அவன் அழைப்புக்கு இணங்கி அங்கே வந்திருந்தவர்களும் குழந்தையை ஆசீர்வதிப்பதற்காகக் காத்துக் கொண்டிருந்தனர். அவரைக் கண்டதும் அவரிடம் குழந்தையைக் கொடுத்து ஆசீர்வதிக்கச் செய்தனர். வேறு வழியின்றிக் கைலாசமூர்த்தியும் குழந்தையை அன்போடு ஆசீர்வதித்தார்.

அதைத் தொடர்ந்து சாப்பாட்டை முடித்துக் கொண்டு, தாம்பூலம் வாங்கிக்கொண்டு வீடு வந்து சேர்ந்தார் கைலாசமூர்த்தி. ஒருநாளுமில்லாத திருநாளாக பத்து வருஷங்களுக்குப் பின்பு மறுபடியும் இவ்விதமான ஒரு வைபவத்தில் கலந்து குழந்தையையும் ஆசீர்வதித்ததை நினைத்துப் பார்த்தபோது அவருக்கே ஆச்சரியமாயிருந்தது.

## 3

பிற்பகல் மணி நான்கு இருக்கும். ஏதோ பத்திரிகை வாசிப்பதில் ஈடுபட்டிருந்தார் கைலாசமூர்த்தி "ஸார்!" என்ற குரல் கேட்டதும் திரும்பிப் பார்த்தார். குப்புசாமிதான் நின்று கொண்டிருந்தான். "உங்களை டிபன் சாப்பிட அழைக்க வந்தேன்" என்றான் குப்புசாமி.

"அதற்கென்ன வருகிறேன்!" என்று கூறிக் கைலாசமூர்த்தி புறப்படத் தயாரானார்.

குப்புசாமி மேலும் தொடர்ந்து, "ஸார்! இன்றைக்கு நீங்கள் என் அழைப்புக்கு மதிப்புக் கொடுத்து என் வீட்டுக்கு வந்து என் குழந்தையை ஆசீர்வதித்தது எனக்கும் மஞ்சுளாவுக்கும் எவ்வளவோ சந்தோஷம்!" என்று அன்பு ததும்பச் சொன்னான்.

கைலாசமூர்த்தி சற்று நேரம் யோசனையில் ஆழ்ந்தார். பிறகு குப்புசாமியைப் பார்த்து, "நீர் சொல்லுகிறமாதிரி எனக்கு வயது ஆகியிருக்கலாம். ஆனால் குழந்தை குட்டி இல்லாதவன். அதே காரணத்தால் குடும்பத்தில் நடக்கும் நல்ல காரியங்களில் பங்கெடுத்துக் கொள்ள லாயக்கில்லாதவனாக என்னையே நான் கருதுகிறேன். பத்து வருஷங்களுக்கு முன்பு நான் கலந்து கொண்ட இதுமாதிரியான ஒரு வைபவத்தைத் தொடர்ந்து நடந்த அனுபவம்தான் அதற்குக் காரணம். அதனால் எனக்கு ஏற்பட்ட மனோவேதனை சொல்லி முடியாது. இன்று நான் பழைய சம்பவங்களை மறந்து பிறந்த நாள் வைபவத்தில் பங்கெடுத்துக் கொண்டு உம் குழந்தையையும் ஆசீர்வதித்தது எனக்கே ஆச்சரியமாயிருக்கிறது" என்றார்.

குப்புசாமியின் கண்கள் ஆச்சரியத்தினால் அகல விரிந்தன. "ஸார், உங்களுக்குக் குழந்தைகள் இல்லை என்ற விவரம் எனக்குத் தெரியாது. என் வரலாற்றைக் கேட்டால் நீங்கள் என் அபிப்பிராயத்துக்கு மதிப்புக் கொடுக்கத்தான் செய்வீர்கள். என்னுடைய தகப்பனுக்கு நான் ஏழாவது குழந்தை. நான் என் சொந்த வீட்டில் இருந்தவரை உடைக்கும் உணவுக்கும், பள்ளிக்கூடத்தில் சேர்ந்து படிக்க பண வசதிக்கும் நான் பட்ட கஷ்டம் கொஞ்சம் நஞ்சமல்ல. என் பதினைந்தாவது வயதில்தான் நான் சற்றும் எதிர்பாராத விதத்தில் மலேயாவிலிருந்து திரும்பி வந்த என்னுடைய ஒன்றுவிட்ட சித்தப்பா என்னை ஸ்வீகாரம் செய்து கொண்டார். அது முதல்தான் எனக்கும் என் குடும்பத்தவர்களுக்கும் நல்ல காலம் பிறந்தது. என் மனைவி மஞ்சுளா என்னுடைய மாமனாரின் சொந்தப் பெண் இல்லை. அவருடைய அபிமான புத்திரி. அவள் அவருடைய தூரபந்து ஒருவருடைய கடைசிப் பெண். மஞ்சுளாவின் பெற்றோர்கள் ஜப்பான் படையெடுப்பின் போது ரங்கூனிலிருந்து இந்தியாவுக்குத் தப்பி வரும்போது காலமாகி விட்டார்கள். கல்கத்தா அகதி முகாம் ஒன்றிலிருந்த மஞ்சுளாவை அடையாளம் கண்டு பிடித்துத் தன்னுடன் கூட்டிக்கொண்டு வந்து தன் சொந்தக் குழந்தை போலப் பாவித்து வளர்த்துக் கடைசியாக அவளை எனக்குத் திருமணம் செய்து வைத்தார் மஞ்சுளாவின் வளர்ப்புத் தந்தை. இதை இரண்டையும் விட இன்னும் ஒரு தகவல் சொல்லுகிறேன். மஞ்சுளாவின் முதல் பிரசவம் கொஞ்சம் கவலைக்கிடமாகத்தான் இருந்தது. அந்தச் சமயத்தில் குழந்தையையும் தாயையும் பிழைக்க வைக்க டாக்டர்கள் மிகவும் சிரமப்பட்டு விட்டார்கள். இவை யெல்லாவற்றையும் பார்க்கப் போனால் நான் சம்பந்தப்பட்ட வரை எனக்கு ஆபத்து சமயத்தில் உதவி செய்தவர்களும் என்னுடைய நல் வாழ்வுக்கும் சந்தோஷத்துக்கும் உதவியவர்கள் எல்லோருமே குழந்தைகள் இல்லாதவர்கள். அதே காரணத்தால் என்னுடைய குழந்தைக்கும் உங்களுடைய முதல் ஆசீர்வாதம் கிடைத்தது பெரிய பாக்கியம்தான்!

"குழந்தைகளைப் பெற்றவர்களைவிட குழந்தையில்லாதவர்களே குழந்தையின் அருமையை அதிகம் அனுபவித்தவர்கள் என்பது என் நம்பிக்கை. அவர்களுடைய ஏக்கமே அதற்கு அத்தாட்சி. 'காக்காய் உட்காரப் பனம் பழம் விழுந்தது' என்



## படத்திறப்பு விழா!



கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கத்தில் சென்ற மாதம் பதினேழாம் தேதியன்று ரசிகமணி ஸ்ரீ டி. கே. சி. அவர்களின் திரு உருவப் படத்தை வேதாரண்யம் சர்தார் வேதரத்தினம் பிள்ளை அவர்கள் திறந்து வைத்து ரசிகமணி அவர்கள் தமிழுக்கும் தமிழ் இலக்கியத்துக்கும் செய்து வரும் தொண்டை வெகுவாகப் பாராட்டினர். மேற்படி விழாவின் போது திறந்து வைக்கப் பட்ட ரசிகமணி அவர்களின் திருவுருவப் படத்தையும் சர்தார் வேதரத்தினம் பிள்ளை அவர்களையும், பாரதி தமிழ்ச் சங்கத்தைச் சேர்ந்த ஸ்ரீ டி. எஸ். சேதுபதி அவர்களையும் மேலே படத்தில் காணலாம்.

---

னும் பழைய கொள்கையில் எனக்கு அவ்வளவாக நம்பிக்கை கிடையாது. மனது திருப்தியுடன் உண்மையோடு நீங்கள் என் வீட்டுக்கு வந்து என் குழந்தைக்கு ஆசீர்வாதம் செய்தது என்னுடைய பாக்கியம். என்னுடைய நல்வாழ்வில் தங்களை விட அதிக சிரத்தை யுள்ளவர்கள் யாரும் எனக்குக் கிடையாது. அனாதையாக வந்த எனக்கு வீட்டைக் கொடுத்து, அதற்கு வேண்டிய சாமான்களையும் கொடுத்து நான் கேட்காமலேயே எனக்கு வேண்டிய உதவிகளையும் செய்யும் உங்களை விட என் குழந்தையை ஆசீர்வதிக்கத் தகுதியுள்ளவர்கள் வேறு யாரும் கிடையாது. உங்கள் குணத்தின் மேன்மையை உங்களைவிட நான் அதிகம் தெரிந்து கொண்டவன். பத்து வருஷங்களுக்குப் பிறகு உங்கள் மனப்போக்கில் ஒரு மனமாறுதல் ஏற்பட்டதற்கு நான் காரணம் என்று நீங்கள் குறிப்பிட்டதை எண்ணிப் பெருமைப்படுகிறேன். உண்மையிலேயே நீங்கள் ஒதுங்கி இருப்பதைவிட இவ்வித வைபவங்களில் கலந்து கொள்வதால்தான் நிரந்தரமான மன நிம்மதிக்கு வழி காண முடியும் என்பது என் அபிப்பிராயம். உங்கள் தீர்மானம் எப்படியோ!" என்று சொல்லி முடித்தான் குப்புசாமி.

கைலாசமூர்த்தி அவனைப் பார்த்து, "குப்புசாமி, உம்முடன் நான் நெருங்கிப் பழகாததால் உம் மனதை நான் சரியாக அறிந்து கொள்ள முடியவில்லை. வயதில் சிறியவராக இருந்தும் அனுபவத்தில் நீர் முதிர்ந்தவர் என்பதை இப்பொழுதுதான் உணர்ந்தேன். உம்முடைய குழந்தைக்கு என்னுடைய பரிபூர்ண ஆசி இன்றைக்கு மட்டும் இல்லை, என்றைக்கும் உண்டு என்பதை வைத்துக் கொள்ள வேண்டும்" என்றார் தழுதழுத்த குரலில். பிறகு குப்புசாமியைப் பின் தொடர்ந்து அவன் வீட்டுக்குச் சென்றார் கைலாசமூர்த்தி.

அவர் சிற்றுண்டி சாப்பிட்டு விட்டுக் குப்புசாமியிடம் விடை பெற்றுக் கொண்டு திரும்ப எத்தனிக்கும்போது குப்புசாமியின் குழந்தை தன்னைச் சுற்றிலும் இருந்த விளையாட்டுச் சாமான்களையும், விளையாட்டையும் மறந்து நகர்ந்து கொண்டே வந்து கைலாச மூர்த்தியின் கால்களைப் பற்றியது. கைலாசமூர்த்தி குழந்தையை இரண்டு கைகளாலும் அள்ளி எடுத்து உச்சி முகர்ந்தார். குழந்தை அதன் தளிர்க் கரங்களைக் கொண்டு அவர் கழுத்தைக் கட்டிப் பிடித்தபோது அவர் உடல் சிலிர்த்தது. குழந்தை அதன் அழகு வாயைத் திறந்து அவரைப் பார்த்துச் சிரித்ததும் அவர் ஒரு கணம் மெய்மறந்தார். அதே சமயத்தில் இனம் தெரியாத ஒரு இன்ப வேதனை அவர் இதயத்தைக் கிளு கிளுக்கச் செய்ததை அவர் உணர்ந்தார். 'குப்புசாமி கொடுத்து வைத்தவன்' என்று அவர் வாய் முணு முணுத்தது. அவர் மனத்தில் சாந்தி நிலவியது.

# நீங்கள் உங்களுடைய நிலத்தை உழுவதற்கு ஓர் யானையை வாங்குவீர்களா?



சுத்த மடத்தனம் அல்லவா? ஆயினும் பாட்டரி ரேடியோ உபயோகிக்கும் அநேகர் குறைந்த சக்தி செலவில் திருப்திகரமாக ரேடியோ கேட்க முடிந்தாலுங்கூட, மிகவும் சக்தி வாய்ந்ததும் அதிக செலவு அளிக்கக் கூடியதுமான, ஸெட்டுகளை உபயோகிக்கிறார்கள்.

அதிகப்படியான வால்யூம் அளிக்கக்கூடிய ஓர் ரேடியோ ஸெட் பாட்டரியின் சக்தியை வெகு சீக்கிரத்திலேயே வீணாக வற்றச் செய்கிறது.

குறைந்த சக்தியால் வேலை செய்யும் ஓர் ரேடியோ பாட்டரி சக்தியை சிக்கனமாக செலவிட்டு உங்களுடைய பணத்தையும் எப்பொழுதும் மிச்சப்படுத்துகிறது. ஆகையால் நீங்கள் ஒரு பாட்டரி ரேடியோ வாங்கும்பொழுது குறைந்த சக்தியை உபயோகிக்கும் ஸெட்டையே பார்த்து வாங்குங்கள். அதுவே உங்களுக்குப் போதிய, தெளிவான வால்யூமை அளித்து, பெருங்கூச்சலை தவிர்க்கிறது.

**நீங்கள் எப்பொழுதும்**

# EVEREADY

TRADE-MARK

**ரேடியோ பாட்டரிகளையே உபயோகியுங்கள்**

அவைகளே உலகத்தில் மிகச்சிறந்த ரேடியோ பாட்டரிகள்

**ஒரு நாஷனல் கார்பன் தயாரிப்பு**

# அஜீரணத் தொல்லை அகன்றது

## பிணியுற்றோருக்கு ஒரு பெரிய செய்தி

உங்களுக்குப் பிடித்த பண்டங்களைச் சாப்பிடும் போதெல்லாம் அஜீரணத்தினால், நீங்கள் அவஸ்தைப்படுகிறீர்களா? மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பவுடர் உதவியைக் கொண்டு ருசிகரமான கறிகள், சட்னிகள், காரசேவண்டிகள், மற்றும் பலபதார்த்தங்கள் இவற்றுடன் கூடிய நல்ல சாப்பாட்டை மீண்டும் சாப்பிட்டு மகிழலாம் என்று ஆயிரக்கணக்கான பேர் உணர்ந்து வருகின்றனர். இந்த ஆச்சரியகரமான ஔஷதம் சகலவிதமான அஜீரண நோய்களையும், அசௌகரியங்களையும் மாத்திரந்தான் குணப்படுத்துகிறது என்பதில்லை; அஜீரணம் ஏற்படக்கூடிய காரணங்களையும் தடுத்து தேகநிலையைப் பாதுகாத்து உதவவும் செய்கிறது. உலகமுழுவதிலுமுள்ள ஆயிரக்கணக்கான மக்களுக்கு அவர்கள் இஷ்டம் போல எப்போது வேண்டுமாயினும் என்ன வேண்டுமாயினும் சாப்பிடக்கூடியபடி அவர்களது அஜீரணத்தொல்லைகளை நீக்கி உதவியளித்து மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பவுடர் அவர்களுக்கு ஒரு புது வாழ்வை யளித்திருக்கிறது.

ஞாபகமிருக்கட்டும். மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பவுடர் உலக பிரசித்திபெற்றது. எனவே அநேகம் பேர் அதைக் காப்பியடிக்கப் பார்க்கிறார்கள். "அலெக்ஸ் ஸி. மக்ளீன்" என்கிற கையொப்பம் இருக்கிறதா என்று பார்த்து உண்மையான சரக்கையே வாங்குங்கள்.






# மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பவுடர்

வியாபார விவரங்களுக்கு:

ஜே. எச். மாரிஸன், ஸன் & ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட்
தபால் பெட்டி 6527, பம்பாய் 26; தபால் பெட்டி 387, கல்கத்தா
தபால் பெட்டி 1370, மதராஸ்



# அவர் செய்த உதவி

துஷ்யந்தன்

“படித்து முடிந்ததும் நீ என்ன செய்யப் போகிறாய், தம்பி?” என்று கேட்டார் உலகளந்த பெருமான் சிரித்துக் கொண்டே. பக்கத்தில் கை கட்டி நின்று கொண்டிருந்த அச் சிறுவனின் கண்களில் நீர் துளித்தது.

“அம்மா ரொம்பக் கஷ்டப் படுகிறாங்க. நான் படித்து நிறைய சம்பாதித்து அவர்களுக்குச் சேலையும் வீடும் வாங்கிக் கொடுப்பேன். பிறகு நிலத்தை வாங்கி நன்றாக உழைத்து முன்னுக்கு வரப்போகிறேன்...” அவன் முடிப்பதற்குள் பெரியவர் அச் சிறுவனை அருகில் இழுத்து அணைத்துக் கொண்டார்.

“தம்பி, நீ நல்ல பையன். அவசியம் முன்னுக்கு வந்துவிடுவாய். எத்தனையோ பேர் பள்ளிக்கூடச் சம்பளத்துக்காக என்னிடம் வருகிறார்கள். படித்து என்ன செய்யப்போகிறாய் என்று கேட்டால் பங்களா வாங்கி கார் வைத்துக் கொள்வேன். சினிமா ஸ்டுடியோ ஆரம்பித்துப் பணக்காரனாவேன். அப்படி இப்படி என்றுதான் சொல்லுகிறார்கள். படித்ததும் உழைப்பேன் என்று நீ ஒருத்தன் தான் சொன்னாய். நீ நன்றாக இருக்கவேணும். நான் பணம் தருகிறேன், நன்றாகப் படி. பகவான் இருக்கிறார். நீ முன்னுக்கு வந்ததும் இப்படி யாராவது ஏழைகள் படிப்பதற்காக உன்னிடம் உதவிக்கு வந்தால் மனம் கோணாமல் கொடு. போய் வா” என்று அச் சிறுவனைத் தட்டிக் கொடுத்தார்.

பக்கத்தில் உட்கார்ந்து இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த எனக்கு என்னமோ நாடகம் பார்ப்பது போலத்தான் இருந்தது. என் வியப்பை முகக் குறியால் அறிந்து கொண்டு அவர் சொன்னார்.

“ஆமாம், சார். இப்போது நான் பெரிய மனுஷன். ஊர் உலகமெல்லாம் இப்பொழுது என்னைப் புகழுகிறார்கள். நான் ‘இல்லாத பொது ஸ்தாபனமே இல்லை. எல்லா இடங்களிலும் என்னைச் சேர்த்துக் கொண்டு என்னிடம் பொருள் உதவி கோருகிறார்கள். ஓங்கி உலகளந்த பெருமான் என்று கவுரவமாகச் சொல்லிக் கொள்கிறார்கள். இருபது வருஷங்களுக்கு முன்னால் நான் மாடு மேய்த்துக் கொண்டிருந்தபோது வெறும் பெருமாளாகத்தான் இருந்தேன்.”

“என்ன மாடு மேய்க்கறப்போவா?” என்று நான் அடக்கமாட்டாத வியப்புடன் அவரைப் பார்த்துக் கேட்டேன்.

“ஆமாம், சார். தர்மக் கோனார் மகன் மாடு மேய்க்காமல் ‘ப்யூக்’ காரிலா போக முடியும்? காலையிலே மாட்டைப் பிடித்துக் கொண்டு போய்ப் பெரிய மனுஷான் வீட்டு வாசலில் கட்டிப் பால் கறந்து கொடுக்கணும். அப்போதுதான் தண்ணீர் கலக்காத நல்ல பால் என்று நம்புவாங்க. இப்படிக் ‘கோனார்’ உத்தியோகம் பார்த்து விட்டு ஒன்பது மணிக்குக் குடிசைக்குப் போய்க் கூழோ கஞ்சியோ குடித்துவிட்டு உடனே பள்ளிக்கூடம் போகணும். நேரமாகி விட்டால் கிடைக்கிற உதையையும் வாங்கிக்கணும். ஏழை வீட்டுப் பிள்ளைதானே, சார்! எனக்காக யார் சிபாரிசுக்கு வரப் போகிறார்கள்?”

அவர் தம்முடைய கதையை ஆரம்பித்ததும் அந்தச் சிறுவனும் அதை ஆவலோடு கேட்டபடியே அங்கேயே நின்று விட்டான்.

“தம்பி! உழைத்து முன்னுக்கு வந்த என் கதையைக் கேட்டுக்கொள்” என்று சொல்லி அவர் மேலே தொடர்ந்தார்.

“பள்ளிக்கூடச் சம்பளம் கட்டுவதற்கும் புஸ்தகங்களை வாங்குவதற்கும், ரொம்பக் கஷ்டப் பட்டேன். அரை வயிற்றுக் கஞ்சிக்கே தாளம் போடும் போது படிப்பதற்கு எப்படிச் செலவு செய்ய முடியும்? என்னமோ படித்து உத்தியோகம் பார்த்துப் பையன் மனிதனாகணும் என்று அப்பா நினைத்தார். எனக்கும் எங்கள் ஊர் டாக்டரைப் பார்த்தால் அவரைப் போல நாகரிகமாக நாமும் இருக்கலாம் என்றுதான் ஆசையாயிருக்கும். அந்த வேகம்தான் படிக்கத் தூண்டியது. கடனோ உடனோ வாங்கிப் பள்ளிக்கூடத்தில் கொட்டி விட்டு வருவேன். அப்படியே நடந்திருந்தால் ஒரு வேளை வாழ்க்கை எப்படி ஆகியிருக்குமோ?...எங்கேயாவது ரேமத்தான் பட்டியில் தாலுகா ஆபீஸ் குமாஸ்தாவாக இருப்பேன். இல்லையானால் வேறு ஏதாவது ஒரு கம்பெனியில் எட்டு மணி நேரமும் உழைத்துக் கம்பெனியையும் கம்பெனி முதலாளியையும் முன்னுக்குக் கொண்டுவரும் குமாஸ்தா கூட்டத்தில் ஒருவனாகத்தான் இருப்பேன். ஆனால்

நாம் காணும் கனவு கூட நாம் நினைக்கிற மாதிரி முடிகிறதில்லையே; இந்தப் பையன் வயதுதானிருக்கும். எனக்கு நன்றாக நினைவு இருக்கிறது. பள்ளிக்கூடத்துக்கு அன்றைக்குச் சம்பளம் கட்டும் கடைசி நாள். கட்ட முடியவில்லை என்றால் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளி விடுவார்கள். எங்கேயெல்லாமோ அலைந்து திரிந்து பார்த்தேன். ஒன்றும் கிடைக்கவில்லை.

"கடைசியாக என்னை நான் இப்போ இருக்கிற நிலைக்குக் கொண்டு வந்த அந்தப் புண்ணியவானிடம் போனேன்."

சற்று நிறுத்தி விட்டுத் தமது மேஜையின் மேலிருந்த ஒரு படத்தைக் காண்பித்தார் ஓங்கி உலகளந்த பெருமான். ஒரு மீசைக்கார மாஜி ஜமீன்தாரின் படம் அது. எதிரிலிருந்த சிறுவனும் கிட்ட வந்து அதைப் பார்த்தான். அவன் கண்கள் அகல விரிந்தன. "அட, இது எங்க தாத்தாவின் படம்!" என்றான் ஆவலோடு.

ஓங்கி உலகளந்த பெருமானின் முகம் சற்றே மாறியது.

"அவர்தான் அந்தச் சமயத்திலே உங்களுக்குப் பணம் கொடுத்து ஒத்தாசை பண்ணி முன்னுக்குக் கொண்டு வந்தாராக்கும்" என்று விஷயத்தைத் தொடர்ந்தேன் நான்.

ஒரு பெருமூச்சு விட்டு விட்டு அவர் மீண்டும் தொடர்ந்தார். "உண்மையிலேயே அவர்தான் நான் முன்னுக்குவர வழி செய்த மகான். ஆனால் பண உதவியால் இல்லை. நான் போய் அவர் வீட்டு வாசலில் நின்றதுமே ஒருதரம் என்னை ஏற இறங்கப் பார்த்தார். பிறகு சுற்று முற்றும் பார்த்தார். மனிதர் மிகவும் நல்லவர் போலிருக்கிறது என்று நினைத்துச் சந்தோஷப் பட்டுக் கொண்டிருந்தேன். அப்பொழுதுதான் நான் எதிர் பார்க்காதது நடந்தது. சாதாரணமான குணமுள்ள பணம் படைத்தவர்கள் ஒரு ஏழையிடம் எப்படி நடந்து கொள்வார்களோ அதைப்போலவே அவரும் நடந்து கொண்டார். அவர் வீட்டு தர்வானிடம் கூச்சல் போட்டார், 'எந்த முட்டாள் இவனை உள்ளே விட்டான்' என்று. அப்பவே எனக்கு நம்பிக்கைப் போய் விட்டது. இருந்தாலும் படிப்பு மேல் இருந்த ஆசையால் அவர் காலில் விழாத குறையாக விஷயத்தைச் சொன்னேன். அவர் கேட்கிறவராயில்லை.

"'சீ, போடா வெளியே. மாடு மேய்க்கிற பயலுக்குப் படிப்பு வேறு. அதுக்கு உதவி வேறு. படித்து என்ன கலெக்டர் ஆகிவிடலாம் என்று எண்ணமோ......? மாட்டை ஒழுங்கா மேய்த்துக் கொண்டு இரு. அது போதும்' என்று என்மீது சீறி விழுந்தார்."



உலகளந்த பெருமான் இதைச் சொன்னதும் சிறுவன் முகத்தைப் பார்த்தேன். அதில் ஏமாற்றமும் கவலையும் படர்ந்திருந்தன. அந்தப் பெரிய மனுஷனின் தவப் பேரன் தான் என்று தெரிந்ததும் அவமானத்தால் அவன் தலை குனிந்தது.

ஆனால் மாடு மேய்த்தவரின் மனம் மிகவும் பண்பட்டிருந்தது. அவர் சிறுவன் கவலையைப் புரிந்துகொண்டு விட்டார்.

"இல்லை தம்பி, நீ அவர் பேரனாயிருப்பதினாலேயே உனக்கு உதவி செய்யாமல் விட்டு விட மாட்டேன். அவர்தான் எனக்கு வாழ வழி காட்டியவர். அன்றைக்குப் படிப்பை விட்டு வெளியே போனவன் மாடு மேய்ப்பதையே தொழிலாக வைத்துக் கொண்டேன். மாடுகளைப் பாதுகாத்துப் பால் விற்று ஜீவனம் நடத்த ஆரம்பித்தேன். எந்தத் தொழிலிலும் உண்மையும் உழைப்பும் இருந்தால் கட்டாயம் முன்னுக்கு வரலாம். சோம்பல் மிகக் கொடிது. சோம்பலின்றி உழைக்க வேண்டும். நான் அப்படி உழைத்தேன். நேர்மையாக உழைத்தேன். யாரையும் மோசம் செய்யாமல் உழைத்தேன். மனிதன் கைவிட்டாலும் மாடுகள் கைவிடவில்லை. இப்பொழுது எனக்குச் சொந்தமாகப் பதினெட்டுப் பால் பண்ணைகள் இருக்கின்றன. சுகமாக இருக்கிறேன்.

"முதலில் அந்த ஜமீன்தார் 'வெளியே போடா' என்று சொன்னதும் கஷ்டமாகத்தான் இருந்தது. 'மாடு மேய்க்கிற பயல்' என்று அவர் கூச்சலிட்டபோது மாடிப் படி வழியாக அவர் பெண் இறங்கிவந்து கொண்டிருந்தாள். அதைப் பார்த்தபோது அவமானமாகத்தான் இருந்தது. அவளுக்கு முன்னால் நான் தலை குனிந்து நின்றேன். வாசந்தி என் வகுப்பிலேதான் படித்துக் கொண்டிருந்தாள். ரொம்ப நல்ல பெண். பள்ளிக்கூடத்தில் என்னிடம் அன்போடு பழகுவது அவள்

ஒருத்திதான். ஒரே யொரு சட்டையை மாற்றி மாற்றி நான் போட்டுக் கொண்டு வருவதைப் பார்த்து மற்றப் பள்ளிக்கூடத்துப் பசங்கள் எல்லாரும் பரிகாசம் செய்வார்கள். அப்பொழுது அவள்தான் எனக்காகப் பரிந்து பேசுவாள். 'ஆமாம், உங்கப்பாவிடம் சொல்லி நீதான் அவனுக்கு வேறு சட்டை வாங்கித் தரச் சொல்லேன்' என்பாள். நான் வகுப்பில் நல்ல மார்க்கு வாங்கிவிட்டால் இந்தப் பசங்கள் என்னை அடித்து நொறுக்கி விடுவார்கள். 'மாட்டுக்காரப் பயல் நம்மை விட அதிக மார்க்கு வாங்கிவிட்டான்' என்று கத்துவார்கள். அப்போதெல்லாம் தன் சின்னஞ்சிறு கைகளால் என் கண்களைத் துடைத்து ஆறுதல் சொல்லுவது அவள்தான்.

"'அவர்களெல்லாம் துஷ்டப் பசங்கள். நீ அவர்களிடம் போகாதே' என்பாள் ரொம்பப் பெரியவள் போல. 'அப்பாவிடம் சொல்லி உனக்கு நிறையப் பணம் கொடுக்கச் சொல்லட்டுமா?' என்று கேட்டாள்.

"'வேண்டாம் வாசந்தி. நான் சும்மா பணம் வாங்க மாட்டேன். வேண்டுமானால் பால் போடுகிறேன். அந்தப் பணத்தைக் கொடுக்கச் சொல்' என்றேன். அப்படித்தான் அவர்



வீட்டில் பால் போடுவதற்கு வாடிக்கைப் பிடித்தேன். அந்தச் சிறுமிக்கு முன்னால் நான் அவமதிக்கப்பட்டதை நினைத்தால்......

"அப்பவும் அவள் சும்மா யில்லை. அப்பா சொல்லுவதைக் கேட்டபடியே வந்தவள், 'ஏன் அப்பா! அவனைக் கோவிச்சுக்கிறீங்க? நான்தான் அவனை வரச் சொன்னேன். என்னைப் படி படின்னு உயிரை வாங்கிறீங்களே! அவனை மட்டும் மாடு மேய்க்கப் போகச் சொல்றீங்களே'' என்று கேட்டாள். ஆனால் அந்த மனிதரின் நெஞ்சில் அப்பொழுதும் கொஞ்சம்கூட ஈரமில்லை. கண்களைப் பார்த்தாலே தெரியும் எரிகிற கொள்ளி போல. நான் அதற்குப் பிறகு அங்கே நிற்கவில்லை. வாசலைத் தாண்டும் போது வாசந்தி விம்மியழும் சத்தம் கேட்டது. அவள் எங்கே யாவது ஏழையின் வயிற்றில் பிறந்திருக்க வேண்டியவள் என்று நினைத்துக் கொண்டேன். அதிருக்கட்டும் தம்பி இந்த மனுஷர் உன் தாத்தாவென்று சொன்னாயே...''

சிறுவன் துக்கம் நெஞ்சடைக்கச் சொன்னான். ''ஆமாம். இது எங்க அம்மாவோட அப்பாதான். அம்மா இதே போல ஒரு படம் வைத்திருந்தார்கள். சூதாடியே எல்லாப் பணத்தையும் அழித்து விட்டாராம். என் அப்பாவைக் கூட அவர்தான் மோசமாகக் கொன்று விட்டாராம்.''

அதற்கு மேல் அச்சிறுவனால் பேச முடியவில்லை. கண்ணீர்விட்டு அழுதான்.

உலகளந்த பெருமாள் அவனைக் கட்டித் தழுவிக் கொண்டார். அவர் கண்களில் மப்பும் மந்தாரமும் கவிழ்ந்து கடைசியில் மழைத் துளியும் கண்டது.

சென்ற காலத்து நினைவின் நிழல் அவர் முன் நீண்டு வளர்ந்தது.

"தம்பி, கவலைப்படாதே. நன்றாகப் படி. படித்தபின் உழைத்துச் சம்பாதித்து அம்மாவைக் காப்பாற்று. தாயார்தான் தெய்வம்'' என்றார். அதற்கு மேல் பேச அவராலும் முடியவில்லை. ஏதோ ஒன்று வந்து அவர் நெஞ்சை அடைத்தது.

ஏமாற்றத்தின் ஏணிப் படியில் ஏறி வந்த அவருக்கும் பிள்ளைப் பிராயத்தின் கனவுகள் இருக்கத்தான் செய்தன. முன்னுக்கு வர வேண்டும் என்கிற வேகத்தில் அந்தக் கனவுகள் பின்னுக்குப் போயிருந்தன. இப்பொழுது சூழ்ந்து வரும் கருமேகங்கள் போல அவை அவர் கண்களில் வந்து 'கூட்டம்' போட்டன. கண்ணீரில் மிதந்து கொண்டிருந்த கண்களை அவர் துடைத்துக் கொண்டார்.

"படி தம்பி, படி. படித்து உழைத்துச் சம்பாதித்து அம்மாவைக் காப்பாற்று. தாயார்தான் தெய்வம்'' என்று அவர் சொல்லிக் கொண்டேயிருந்தார்.

தூரத்தில் தெரிந்த மாட்டுப் பண்ணையில் மாடுகள் கொழு கொழு வென்று கும்பலாக நின்று கொண்டிருந்தன. அவைகளைச் சுற்றிக் கன்றுகள் கொம்மாளம் அடித்துத் துள்ளி விளையாடிக் கொண்டிருந்தன. ஒரு தாய்ப் பசு மட்டும் தன் அருகில் நின்று கொண்டிருந்த கன்றை அன்போடு நாக்கினால் நக்கிக் கொடுத்துக் கொண்டிருந்தது. அந்தக் குற்றமற்ற அன்பைப் போலவே தோன்றியது ஓங்கி உலகளந்த பெருமாள் சிறுவனிடம் காட்டிய அன்பு. அந்தக் காட்சி என் கல் மனத்தையும் உருக்கி விட்டது.

DX369TM

# புதிய டன்லப் போர்ட் டயர்கள்

## சேவைக்கென்றே தயாரானவை

### வீட்டில் சினிமா ( புரொஜக்டர் )



இந்த எளிதான புரொஜெக்டரை எலெக்ட்ரிக் கரண்டிலும், டார்ச்சு லைட்டிலும் இயக்கலாம். திரையில் விழும் படங்கள் உயிருள்ளவை போலத் தோன்றும். உங்கள் வீடே சினிமா தியேட்டர்போல இருக்கும். பிலிம்கள் எல்லாம் மிக நவீனம். எல்லாவிடங்களிலும் கிடைக்கும். (35 m. m.) விலை ரூ. 12-8-0. வி.பி.பி. சார்ஜ் ரூ. 2-0-0 தனி. மேற்கொண்டு பிலிம் செதும் 1-க்கு அணா 8.

### தானாகவே இயங்கி 6 தடவைகள் சுடும் பிஸ்டல்
( லைசென்ஸ் தேவை இல்லை )



தானாகவே இயங்கி ஆறு முறைகள் சுடும் ரிபீட்டர் டயலுடன் கூடியது. திருடர்களும் காட்டு மிருகங்களும் பயந்து நடுங்கும் அளவு பெரிய சத்தத்தையும், நெருப்பையும் கக்கும்; நாடகத்திற்கும், சர்க்கஸ்களுக்கும் மிக உபயோகமானது. விரோதிகள் எதிர்க்கும் சமயத்தில் உங்களுக்கு உற்ற தோழன். விலை ரூ. 8-8-0 வி. பி. பி. சார்ஜ் ரூ. 1-12-0 தனி. 12 ரவைகள் இலவசம். மேற்கொண்டு ரவை டஜன் ரூ. 1-4-0 பிஸ்டல் கேஸ் ரூ. 2-8-0.

### புதுமாதிரி அமெரிக்கன் சிறிய ஸ்பிரிட் ஸ்டவ்



உங்களது சிற்றுண்டி, டீ, வெந்நீர் முதலியவைகளை தயாரித்துக் கொள்ள மிகவும் உபயோகமானது. இந்த ஸ்டவ்விற்கு கொஞ்சம் ஸ்பிரிட் செலவு செய்தால் உங்கள் வேலையை பூர்த்தி செய்யும். ஒன்றின் விலை ரூ. 6-0-0. வி. பி. பி. சார்ஜ் ரூ. 1-8-0 தனி.

### எலக்ட்ரிக் & ரேடியோ கைட்

ரூ. 15 செலவில் உங்கள் சொந்த ரேடியோவை தயாரியுங்கள். வீட்டில் எலக்ட்ரிக் ஒயரிங், ரேடியோ ரிப்பேர் முதலிய எலக்ட்ரிக் சம்பந்தமானவைகள் எல்லாம் கற்றுக் கொண்டு மாதம் ரூ. 200 சம்பாதியுங்கள். விலை. ரூ. 4-0-0 தபால் செலவு ரூ. 0-12-0 தனி.

### 14 பாஷைகள் கற்கலாம்

குஜராத்தி, மராத்தி, தமிழ், பஞ்சாபி, ஹிந்தி முதலிய (14 பாஷைகளை) 48 மணி நேரத்தில் கற்கலாம். விலை ரூ. 5. போட்டோ கிராபிக் கலை ரூ. 3. சோப் செய்யும் முறை ரூ. 3. வாசனை திரவியங்கள் செய்யும் முறை ரூ. 3. தையல் & கட்டிங் ரூ. 3. டிராயிங் & பெயிண்டிங் ஆசான் ரூ. 4. சுக வாழ்வு ரூ. 3. ஒவ்வொரு புத்தகத்திற்கும் வி.பி.பி. சார்ஜ் அணா 12 தனி.

கடிதங்கள் ஆங்கிலத்தில் எழுதப்படல் வேண்டும்

**MILAP TRADING CO., (P. 11) P.O. 21 ALIGARH. U.P. (INDIA)**

# ஆரோக்கிய ரகசியம்

### வி. என். குமாரசாமி

## 18. கேள்வியும் பதிலும்

அன்பர்களில் பலர் ஏற்கெனவே வெளியாகியுள்ள கேள்விகளையே திருப்பித் திருப்பிக் கேட்கின்றனர். அநேகமாய் முதலிலிருந்து தொடர்ந்து படிக்காத அன்பர்களாய் இருப்பார்களென்று நினைக்கிறேன். சிலர் இடையிடையில் விட்டுப் படிப்பவர்களாயும் இருக்கலாம். எனவே அவர்கள் படிக்காத அத்தியாயங்களிலுள்ள விஷயங்கள் என்ன என்பதையும், எது எது வெளி வந்திருக்கிறது என்பதையும் அறிய மாட்டார்கள். அதனால்தான் அவர்கள் வந்த கேள்விகளையே கேட்கின்றனர். ஆகையால் அன்பர்கள் சந்தேகம் வந்து கேள்வி கேட்பதற்கு முன் முதலிலிருந்து வந்த தொடர் விஷயங்களை ஒரு தடவை படித்துப் பார்த்துவிட்டு எழுதினால் நல்லது. அநேகமாய் அவைகளிலேயே இவர்களின் சந்தேகங்களில் அநேகம் இருக்க நேரிடலாம்.

பல அன்பர்கள் முதலிலிருந்து வாசிக்கத் தவறி விட்டதற்காக வருத்தம் தெரிவித்து, அக் கட்டுரைகளை அனுப்பும்படியாக எழுதுகின்றனர். அவைகளை அனுப்ப முடியாமைக்கு வருந்துகிறேன். எப்படியும் நண்பர்களிடமோ, வாசக சாலைகளிலோ தேடிப் படித்துக் கொள்ளும்படி கோருகிறேன். சில அன்பர்களுக்கு எடுத்ததற்கெல்லாம் சந்தேகம் வந்து விடுகின்றது. உடனே கடிதம் வரைந்து தள்ளுகின்றனர். அன்பர்களின் ஆர்வத்தை வரவேற்கிறேன். ஆனால் எதற்கென்று பதில் எழுதுவது! சிலர் கேள்விகளைக் கேட்ட அடுத்த வாரத்துக் 'கல்கி'யிலேயே எதிர்பார்க்கின்றனர். அவர்களுடைய கேள்வி அடுத்த வாரமே வந்துவிடும் என்று எதிர்பார்த்து ஏமாந்து விடுவார்களே என்றுதான் வருந்த வேண்டியிருக்கிறது. ஏற்கெனவே வந்த கேள்விகளுக்கும், சந்தேகங்களுக்கும் பதில் எழுதவே ஒரு வருஷத்துக்கு மேல் ஆகும். எனவே இனி வரும் கடிதங்களுக்கு அதற்கு மேலும் ஆகும். ஆகையால் அன்பர்கள் உடனே பதில் எதிர்பார்க்க வேண்டாம் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். அவர்களுக்கெல்லாம் தனித்தனியே கடிதம் எழுதுவதும் சாத்தியமான காரியமல்ல.

நோய்களுக்கு ஆசன சிகிச்சையும், ஆலோசனையும் வேண்டுவோர் மட்டும் பதிலுக்குத் தபால் பில்லைகளுடன் எழுதினால் கவனிக்கப்படும்.

**கேள்வி** :—வயிற்றில் ஹெர்னியா, அப்பெண்டிக்ஸ் ஆப்பரேஷன் செய்து கொண்டவர்கள் ஆசனங்கள் செய்யலாமா? எந்த ஆசனங்களைச் செய்யலாம்? எந்த ஆசனங்களைச் செய்யக்கூடாது?

**பதில்** :—பொதுவாய், வயிற்றை நசுக்கும், மடிக்கும், இழுக்கும் படியான எந்த ஆசனங்களையும் செய்யவே கூடாது. சர்வாங்காசனம், மத்ஸ்யாசனம், சிரசாசனம் மட்டும் செய்யலாம். சிலருக்கு இந்த ஆசனங்கள் செய்தாலும் ஒத்துக் கொள்ளாது. ஆப்பரேஷன் நடந்த இடத்தில் வலிக்கும். இது அவரவர்கள் செய்து கொண்ட ஆப்பரேஷனின் நிலைமையைப் பொறுத்திருக்கிறது. சிறியதாய் அறுத்து ஆப்பரேஷன் நடந்திருந்தால் ஒன்றும் வலிக்காது. அதிகமாய் அறுத்து ஆப்பரேஷன் நடந்திருந்தால் வலிக்கலாம். ஆனால் எல்லோருக்கும் அப்படியாவதில்லை. அப்படிப் பெரிய ஆப்பரேஷன் செய்து கொண்டவர்களில் எத்தனையோ பேர் தனுராசனம், மயூராசனம் போன்ற ஆசனங்களையும் செய்கிறார்கள். என்னைக் கேட்டால் அவர்கள் அவைகளைச் செய்யக்கூடாது என்றுதான் சொல்லுவேன். சிலருக்குப் புஜங்காசனம், பஸ்சிமோத்தானுடன் சர்வாங்காசனம், மத்ஸ்யாசனம், சிரசாசனம் செய்யலாம். ஆகையால் எதையும் நிதானமாகச் செய்ய வேண்டும். ஏதாவது சற்று வலித்தாலும் ஆப்பரேஷன் செய்து கொண்டவர்கள் உடனே ஆசனத்தை நிறுத்தி விடவேண்டும். எதற்கும் ஆசன நிபுணர்களைக் கலந்து அவர்கள் ஆலோசனையை நாடுவதே நல்லது.

**கேள்வி** :—சாப்பிடும்போது தண்ணீர் குடிப்பது நல்லதா, சாப்பிட்ட பின் குடிப்பது நல்லதா?

**பதில்** :—இதிலும் அபிப்பிராய பேதம் பல உண்டு. சிலர் சாப்பிடும்போது இடையிடையில் குடிப்பது நல்லது. அப்பொழுதுதான் ஜீரணம் நன்கு ஆகும். ஆட்டுக் கல்லில் மாவு அரைக்கும் போது இடையிடையே ஜலம் விட்டால்தானே நலமாய் அரைக்க முடிகின்றது. அதைப்போல ஜீரணத்துக்கும் தண்ணீரின் துணைவேண்டும் என்கிறார்கள். சிலர் ஜலத்தையே தொடக்கூடாது; சாப்பிட்ட அரை அல்லது ஒரு மணி நேரம் பொறுத்துத் தான் ஜலம் அருந்தலாம். இடையிலோ உடனேயோ ஜலம் அருந்தினால், வயிற்றிலுள்ள ஜாடராக்னியை, ஜலமானது குறைத்து விடும். அதனால் ஜீரணமாவது பாதிக்கும் என்கின்றனர். சிலர் சாப்பிடுவதற்கு அரை மணி



தென் திருப்பேரை ஸ்ரீ டி. என். வெங்கடாசல ஐயங்கார் அவர்களின் குமாரன் ஸ்ரீ வி. கிருஷ்ணனுக்கும் ஸ்ரீ பி. ஸ்ரீ. ஆசார்யா அவர்களின் சகோதரர் ஸ்ரீ ஏ. என். மகரபூஷணம் அவர்களின் புதல்வி சௌ. சீதாவுக்கும் இம்மாதம் முதல்தேதி யன்று திருநெல்வேலியில் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. திருமணத்துக்கு ஏராளமான நண்பர்களும், பிரமுகர்களும் உறவினர்களும் வந்திருந்து மணமக்களை ஆசீர்வதித்தனர். வாழ்க மணமக்கள்!



நாடகக் கம்பெனி மானேஜர் (பாதியில் எழுந்து போகிறவரைப் பார்த்து):— ஸார், என்ன இது! பாதி நாடகத்திலே புறப்பட்டு விட்டீர்களே! அடுத்த காட்சி ரொம்ப விறு விறுப்பா யிருக்கும். நீங்கள் அதைப் பார்த்தால் அப்படியே திடுக்கிட்டுப் போய் விடுவீர்கள்!

பிரமுகர் (வெறுப்புடன்):— அதை நாடகாசிரியரே பார்த்துத் திடுக்கிடட்டும்!

---

அல்லது ஒருமணி நேரத்துக்கு முன்பே ஒரு டம்ளர் ஜலம் சாப்பிட வேண்டும். அப்பொழுது தான் குடல் சுத்தமாய், வரும் ஆகாரத்தை ஒழுங்காய் ஜீரணிக்கும்; மலச்சிக்கலும் ஏற்படாது என்கின்றனர். சிலர் சாப்பாட்டுக்கு முன்போ, சாப்பாட்டுடன் கூடவோ ஜலத்தை அருந்தக் கூடாது. சாப்பாட்டின் இடத்தை ஜலம் அடைத்துக் கொள்ளும். சாப்பாட்டைச் சாப்பிட முடியாது. ஆகையால் கடைசியில்தான் சாப்பிட வேண்டும் என்கிறார்கள்.

பொதுவாய் இதற்கெல்லாம் திட்டமாய் இந்த மாதிரிதான் ஜலம் அருந்த வேண்டுமென்று கட்டாயப் படுத்துவதற்கில்லை. அவரவர்களின் சரீர நிலை, உடல் உழைப்பு, சீதோஷ்ண நிலை முதலியவைகளை அனுசரித்து நடக்க வேண்டியிருக்கும். பொதுவாக, தாகம் எடுத்தால் தண்ணீர் அருந்துவதே நல்லது. உடலுக்குத் தண்ணீர் அவசியமாகித் தான் தாக உணர்ச்சி ஏற்படுகின்றது. சாப்பிடும்போது இடையில் ஜலம் வேண்டித்தான் தாகமெடுக்கின்றது. அப்பொழுது ஜலம் சாப்பிட வேண்டியதுதான். ஆனால் சிலர் ஊசி மிளகாய்ச் சட்னி, மற்றும் கூட்டு, கறி, பொரியல், பச்சடி, சாம்பார், ரசம் எல்லாவற்றிலும் காரத்தை அள்ளிக்கொட்டிச் செய்வார்கள். அந்தக் காரத்தைப் போக்க ஜலம் அருந்துவது சரியல்ல. சிலருக்குக் காரத்தைச் சாப்பிட்டதும் விக்கல் எடுக்கும். அதற்காக என்று சிலர் ஜலத்தைச் சாப்பிடுவார்கள். இது உண்மையில் தாகமெடுத்துச் சாப்பிடுவதாகாது. இது தவறு. காரத்தைக் குறைத்துக் கொண்டால் இடையில் ஜலம் சாப்பிடவேண்டிய அவசிய மிராது. சாப்பாட்டை அதிகம் சாப்பிடுவதை, ஜலம் அருந்தினால் பாதிக்கும் என்பது சரியான வாதமல்ல. அது சாப்பாட்டு ராமன்கள் வாதம். எப்பொழுதும் பாதி வயிறு சாப்பாட்டையும், கால் வயிறு தண்ணீரையும், கால் வயிறு அப்படியே காலியாகவும் விட்டுவிட வேண்டுமென்பது, ஆரோக்கியமாய் இருக்கவேண்டு மென்பவர்கள் அனுசரிக்க வேண்டிய விதியாகும். வயிறு தலையணை உறையா என்ன! வெறும் பஞ்சைத் திணிப்பது போல் ஆகாரம் கொள்ளுமட்டும் திணிக்க! இன்னும் சிறிது சாப்பிடலாம் என்று தோன்றும் போதே எழுந்து விடுவது சாலச் சிறந்தது. தாகம் எடுத்து, ஜலம் தேவைப் படும்போதெல்லாம் தண்ணீர் அருந்துவதுதான் நல்லது. அப்படி தாகமே சிலருக்கு எடுக்க வில்லையானாலும், அவர்கள் சாப்பிட்ட உடனே ஒரு டம்ளராவது கட்டாயம் தண்ணீர் அருந்த வேண்டும். எந்தக் காரணத்தாலும் மறந்து விடக்கூடாது.

**கேள்வி**:—குடிப்பதற்குத் தண்ணீர் நல்லதா! வென்னீர் நல்லதா! ஐஸ் வாட்டர் நல்லதா! சோடா நல்லதா! கலர் நல்லதா!

**பதில்**:—குடிப்பதற்கு லாயக்கான ஜலத்தை, கொதிக்கவைத்து சுத்தமான துணியால் வடிகட்டி, பானையில் விட்டு ஆறின ஜலமே மிகவும் சிறந்தது. வென்னீர் நம்முடைய தேகத்துக்கே தேவையல்ல. நோயாளிகள், வயதானவர்கள் சில சமயங்களில் வென்னீர் சாப்பிடலாம். சோடா, கலர் முதலியவை ஆரோக்கியத்துக் கடுத்ததல்ல. சோடா எப்பொழுதாவது ஒரு சமயம் அதுவும் ஜீரணக் கோளாறுள்ளவர்கள் மருந்தாகச் சாப்பிடக்கூடியது. மற்றவைகளெல்லாம் தாகம் எடுக்கும் போதெல்லாம் சாப்பிட்டால், அதுவே பலவித நோய்களுக்குக் காரணமாய் விடுகிறது. அவைகள் தயாரிக்கும் இடத்தைப் போய்ப் பார்த்தால் தொடக்கூட மாட்டீர்கள். காசைக் கொடுத்துச் சனியனை விலைக்கு வாங்குவானேன். அப்படி அவசியம் வேண்டுமானால் சுத்தமான இயற்கையான பானம் இளநீர் இருக்கிறது; சாப்பிடுங்கள். எலுமிச்சை பானகம், இந்த வெய்யில் காலத்தில் மிகவும் நல்லது. மோர் இருக்கிறது. ஆனாலும் இதில் பெருங்காயம் மிளகாய், இஞ்சி, கடுகு, உப்பு முதலியவை இடம் கொண்டுவிடும். அப்படிக்கெல்லாம் எதையும் கலக்காமல் வெறும் நீர் மோராய்ச் சாப்பிடலாம். ஐஸ் வாட்டர், எப்பொழுதாவது ஒரு தடவை சாப்பிடுவதில் கெடுதலில்லை. ஆனால் அதையே வழக்கமாக்கிக் கொள்ளக்கூடாது. ஜீரணம் பாதிக்கும்.

**கேள்வி**:—என் காலில் முழங்காலுக்குக் கீழ், பாத மணிக்கட்டுக்கு மேல், ஒரு சாண் வரை படை போல் இருக்கிறது. இது இரண்டு காலிலும் இருக்கின்றது. நமைச்சல் பொறுக்க முடியவில்லை. சில சமயம் வாய்விட்டுக் கத்தியும் விடுகின்றேன். இது சுமார் ஏழெட்டு வருடமாய் இருக்கின்றது. உலகில் என்னென்ன வைத்தியம் உண்டோ அத்தனையும் செய்து பார்த்தாகி விட்டது. பல்லாயிரக்கணக்கில் ரூபாய் செலவழித்தும் குணமாகவில்லை. மனத்தில் சதா வேதனை. அருந்தாத மருந்தில்லை. தடவாத லேபனமில்லை. குத்திக் கொண்ட ஊசிக்கு அளவில்லை. கட்டாத கட்டுகள் இல்லை. எல்லாவற்றையும் ஒரு கை பார்த்தாகி விட்டது. இவைகளை உபயோகிக்கும் போது சிறிது குணமாகின்றது. விட்டு விட்டால் அதிகமாய் விடுகின்றது. நான் மருந்து வகைகளை உபயோகித்து, உபயோகித்துச் சலித்து விட்டேன். அவைகளை நினைத்தாலும் வெறுப்பேற்படுகின்றது நான் இவ்வாறே என் வாழ்நாளைக் கழிக்க வேண்டியது தானா! எனக்கு விமோசன

# ஓவல்டின் சூடாகவோ குளிர்ந்த பானமாகவோ பருகிக் களிப்புறுங்கள்!



குளிர்ந்த பானமாக அல்லது சூடாகப் பருகினாலும் ஓவல்டின் எந்த சமயத்திலும் ருசி மிகுந்த, போஷாக்கு அளிக்கும் பானம். உஷ்ண வேளையில் ஓவல்டின் கலந்த குளிர்பானம் புத்துணர்வளிக்கிறது. இரவில் தூங்குவதற்கு முன் ஓவல்டின் சூடாகக் குடித்தால் ஆழ்ந்த சுகமான நித்திரையைத் தருகிறது; மறுநாள் புதிய ஜீவசக்தியும் ஏற்படுகிறது. ஓவல்டினில் சுத்தமான பசுவின் ஏட்டுப்பால், பழுத்த பார்லி மால்ட், சிறந்த கோக்கோ, இயற்கை உணவுகள், பாஸ்படைட்ஸ், பி & டி விடமின்களும் இருக்கின்றன. ஓவல்டினில் இருக்கும் போஷாக்கு மற்றும் விடமின் சத்துக்கள் இன்றியமையாதவை. ஓவல்டினை விடச் சிறந்தது வேறு கிடையாது. டாக்டர்கள் சிபாரிசு செய்கின்றனர். போலிகளைத் தள்ளிவிடுங்கள்.

விநியோகஸ்தர்கள்: கிரஹாம்ஸ் டிரேடிங் கம்பெனி (இந்தியா) லிட்.,

## ஓவல்டின்

குளிர்ந்த அல்லது சூடான பானம் — எதுவும் ருசியானதே




OV.327

யில்லையா? உங்கள் ஆசன முறைகளாலாவது இந்த வியாதியைக் குணமாக்க முடியுமா?

பதில்:—பொதுவாய் எல்லோருமே இந்த நிலைமையில்தான் ஆசனத்தை அண்டுகின்றனர். எல்லாவற்றையுமே செய்து பார்த்துவிட்டு முடியாத போதுதான் இதையாவது செய்து பார்க்கலாம் என்ற தீராத குறையாய் வருகின்றனர். இவர்கள் ஆரம்பத்திலேயே ஆசனங்களைச் செய்திருந்தால் இவ்வளவு கஷ்டத்துக்கும் ஆளாக வேண்டியதில்லை; பணவிரயமுமில்லை; கால விரயமாவதும் இருக்காது. மிக லேசாய் சில நாட்களிலேயே குணமாகி விடும். வியாதி எவ்வளவு முற்றியிருக்கிறதோ, அவ்வளவுக்கும் குணமாக நாளாகும். எந்த நிலைமையிலும் ஆசனம் அடைக்கலம் தருகின்றது. பொறுமையாய், நம்பிக்கையுடன், பத்தியத்தை அனுசரித்துப் பழக வேண்டும்.

இந்த வியாதியை எக்ஸிமா என்று சொல்லுவார்கள். முதலில் புஜங்காசனம், சலபாசனம், பஸ்சிமோத்தானம் முதலியவைகளை மும்மூன்று தடவைகள் செய்துவிட்டு, சர்வாங்காசனம் ஆரம்பித்து, நாளடைவில் சுமார் அரைமணி வரை செய்யப் பழக்கிக் கொள்ள வேண்டும். பின் மத்ஸ்யாசனம், சாந்தி ஆசனம், நாடிசுத்தி முதலியவைகளையும் செய்யவேண்டும். இரண்டு மாதம் பொறுத்து மத்ஸ்யாசனத்தை முடித்து சிரசாசனமும் ஆரம்பித்து சுமார் இருபது நிமிஷங்கள் வரையிலும் செய்யப் பழகிக் கொள்ளலாம். ஆக இவைகளைப் படிப்படியாய் செய்து முன்னேற வேண்டும். வயிற்றில் ஆப்பரேஷன் நடந்திருந்தால் தன் இஷ்டமாய்ச் செய்யக் கூடாது. யோக ஆசன ஆசிரியர்கள் யாரிடமாவது ஆலோசனை கேட்ட பிறகு தான் செய்ய வேண்டும்.

இதற்கு உணவுப் பத்தியமும் மிக்க அவசியம். அவையில்லாமல் வெறும் ஆசனத்தினால் மட்டும் குணமாகி விடாது. ஆகாரமும் அதற்குத் துணை செய்யும். காரம் மிக லேசாய்ச் சேர்க்கவேண்டும். முற்றிலும் நாற்பது நாள் வரை நீக்கி விட்டாலும் நல்லது. புளியே சேர்க்கக்கூடாது. எலுமிச்சை சேர்க்கலாம். காபி, டீ, புகையிலை, மதுபோன்ற லாகிரி வஸ்துக்களை உபயோகிக்கவே கூடாது. நிறைய காய்கறி, கீரை, பழ வகைகள், தவிட்டுடன் கூடிய அரிசி சேர்த்துக் கொள்ள வேண்டும். இவைதான் உணவுத் திட்டம். தினமும் மூன்று வேளை தவிர மற்ற வேளைகளில் சாப்பிடக் கூடாது. எண்ணெய், நெய்யில் வறுத்த பலகாரங்கள் கூடாது. ஆவியாய் வெந்தது நல்லது.

இந்தப் பத்தியமுடன் தொடர்ந்து ஆறு மாத காலம் செய்து வந்தால் நிச்சயமாகக் குணமாகி விடும். முடிந்தால் சர்வாங்காசனம் மட்டும் மாலையிலும் செய்யலாம். குணமான பின்பும் இரண்டு வருடம் ஆசனங்களைச் செய்தால் மறுபடி இந்நோய் தலைக் காட்டாதபடி உடலிலிருந்தே வேருடன் ஒழிந்து விடலாம். எப்பொழுதும் ஆரோக்கியமாய், நிம்மதியுடன் வாழலாம். (தொடரும்)

● ● ●



## பைத்தியம் தெளிந்தது!

ஒரு சமயம் வின்ஸ்டன் சர்ச்சில் லண்டன் நகரத்திலிருக்கும் பெரிய பைத்தியக்கார ஆஸ்பத்திரி ஒன்றைப் பார்வையிடுவதற்காகச் சென்றிருந்தார்.

அந்த ஆஸ்பத்திரியின் தலைவர் சர்ச்சிலை வரவேற்று அழைத்துச் சென்று ஆஸ்பத்திரியின் பல பகுதிகளை அவருக்குக் காண்பித்தார். ஆஸ்பத்திரியைப் பார்த்துத் திருப்தி அடைந்த சர்ச்சில் அதன் தலைவரைப் பார்த்து, "இங்கு வந்து சிகிச்சை பெற்றவர்கள் யாரேனும் பூரண குணம் அடைந்திருக்கிறார்களா?" என்று கேட்டார்.

"எத்தனையோபேர் பரிபூரண குணம் அடைந்து சென்றிருக்கிறார்கள். அவர்களுடைய விலாசங்கள்கூட இருக்கின்றன. பூரணமாகக் குணம் அடைந்த ஒருவர் இன்றுகூட வெளியேறப் போகிறார்" என்றார் ஆஸ்பத்திரியின் தலைவர்.

"நான் அவரைப் பார்த்துப் பேச விரும்புகிறேன்" என்றார் சர்ச்சில்.

ஆஸ்பத்திரியின் தலைவர் மிகுந்த மகிழ்ச்சியுடன் சர்ச்சிலை அந்த மனிதரிடம் அழைத்துச் சென்று அவ்விருவரையும் தனியே விட்டு விட்டு வெளியே சென்றார்.

சர்ச்சில் அந்தப் பைத்தியம் தெளிந்த மனிதரிடம் பல கேள்விகள் கேட்டார். அந்த மனிதரும் எல்லாவற்றுக்கும் நிதானமாகவும் சரியாகவும் பதிலளித்தார். முடிவில் தான் அவ்விடத்தில் மிகவும் திருப்திகரமான சிகிச்சை பெற்றுக் கொண்டதாகவும் ஆஸ்பத்திரியின் சேவை மிகப் பாராட்டத் தக்கது என்றும் தெரிவித்துக் கொண்டார்.

கடைசியில் சர்ச்சில் அந்த மனிதரிடம் விடை பெற்றுக் கொள்ளும்போது பெருமிதத்துடன் "நான் யார் என்று உங்களுக்குத் தெரியும் என்று நினைக்கிறேன்" என்றார்.

"எனக்குத் தெரியாது!"

"நான்தான் வின்ஸ்டன் சர்ச்சில்!"

இதைக் கேட்டதும் பைத்தியம் தெளிந்த அந்த மனிதர் மிகுந்த இரக்கத்துடன்












## நீங்கள் எங்கிருந்தாலும்...

# ஹிமாலயா புக்கே ஸ்னோ

## உபயோகியுங்கள்.

ஏனென்றால் இது பிரத்தியேகமாக இந்தியாவின் சீதோஷ்ணத்திற்கேற்ப தயாரிக்கப்பட்டது

சீதோஷ்ண நிலை எப்படி இருந்தாலும்—இந்தியாவில் நீங்கள் எங்கிருந்தாலும், ஹிமாலயா புக்கே ஸ்னோ உங்கள் சருமத்தை அதிக மிருதுவாகவும், அழகாகவும் வைத்துக்கொள்கிறது. இதன் நறுமணத்தை நீங்கள் மிகவும் விரும்புவீர்கள்.

இன்னுமொரு நேர்த்தியான **இராஸ்மிக்** தயாரிப்பு

HBS. 6-X30 TM [illegible]

REGD. No. M. 4392

*Registered as a newspaper in Ceylon*